அருள்மிகு வல்லக்கோட்டை முருகன்



# சிங்காரவேலன் பாமாலை

# 2005

உ

சிவமயம்

# சிங்காரவேலன் பாமாலை

# 2005



தொகுத்து வழங்கியோர்

**SK. வேலாயுதம்** (பொன்.புதுப்பட்டி),
செந்தில் ஏஜென்ஸிஸ்,
20, அய்யனார்குளம் மேற்குத்தெரு,
விழுப்புரம்.
☎ : 223426

**RM. முத்தையா** (தேவகோட்டை),
நெ. 51, சுப்புராயலு நகர்,
திருப்பாதிரிப்புலியூர்,
கடலூர்–2
☎ : 224431

மூன்றாம் ஆண்டு வெளியீடு – 2005

"அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு"

அச்சும் அமைப்பும் :

**ஸ்ரீ கற்பக விநாயகர் ஆப்செட் பிரிண்டர்ஸ்,**
வெங்கடேஸ்வரா காம்ப்ளக்ஸ்,
அய்யனார் குளம் மேற்கு தெரு,
விழுப்புரம் – 605 602.
தொலைபேசி : (04146) – 228481

## மூன்றாம் ஆண்டு புத்தக வெளியீடு

தாரண வருடம் தை மாதம் 5–ம் தேதி 18–1–2005 செவ்வாய்கிழமை அன்று இரவு 7–00 மணியளவில் குன்றக்குடி வேதபாடசாலையில் நடைபெறுகிறது.

### நிகழ்ச்சி நிரல்

இறைவணக்கம் : அருளிசை மணி V.செல்வகணேசன்

வரவேற்புரை : RM.சுரேஷ்குமார்

தலைமை : திரு. அ.ராம.அபிலெ.அ.மு.வீர.செம்பொன்(எ)அருணாசலம் செட்டியார்

முன்னிலை : திரு. T.R.ராமநாதன் செட்டியார் திரு,T.சுப்பையா செட்டியார்

வாழ்த்துரை : திரு. தி.அ.சு.ராம.சு.சுந்தரகாசி செட்டியார் அவர்கள்
2004–ஆம் ஆண்டு கந்த சஷ்டி விழா கழக தலைவர்,
உ.மு.லெ.அண்ணாமலை செட்டியார் அவர்கள்
செயலாளர் அ.தி.வெ.அ.மு.மா.அசோக்குமார் அவர்கள்
பொருளாளர் ராம.கரு.சோம.லே.வீரப்ப செட்டியார் அவர்கள்

மூன்றாம் ஆண்டு மலர்
வெளியிடுபவர் : உ.மு.அ.லெ.அண்ணாமலை செட்டியார் அவர்கள்

மூன்றாம் ஆண்டு மலர்
பெறுபவர் : திரு. சுப.அருணாசலம் செட்டியார் அவர்கள்
(சேவுகன் அண்ணாமலை கல்லூரி. தேவகோட்டை)

நன்றியுரை : திரு.சபா.ராஜேந்திரன் தேவகோட்டை

முன்னுரை :

நகரத்தார்கள் தாங்கள் செல்லும் இடங்களில் எல்லாம் இறைவனுக்கு திருப்பணிகள் செய்து தங்களின் இறையுணர்வை பல நூறு ஆண்டுகளாக வெளிப்படுத்தி வருகிறார்கள் அந்த வகையில் தைப்பூசந்தோரும் அழகு தமிழனாம் அடியார் கலிதீர்க்கும் பழனிமலை வேலனைக்கண்டு வரம்கேட்க செட்டிநாட்டு ஊர்களில் இருந்து இரத்தினவேல் துணையுடன் பாதயாத்திரையாக சென்று முருகனை தரிசிக்கின்றனர், பாதயாத்திரையாக செல்லும் பொழுது முருகன் திருப்புகழை பாடிச்செல்வதால் பயணத்தின் கடுமை தெரிவதில்லை, சிங்காரவேலன் புகழ்பாடும் பாடற்தொகுப்புகள் வருடாவருடம் வருகின்றன, அந்த வரிசையில் இந்தநூலும் ஒன்று, இந்த சிங்கரவேலன் பாமாலை என்ற நூலை மூன்றாம் ஆண்டு வெளியீடாக ஈரோடு "சுப" அவர்களின் குழுவின் சார்பாக பழனி முருகனின் பாதங்களில் சமர்பிக்கின்றோம்.

இங்ஙனம்

**சிங்காரவேலன் பாமாலை மலர் வெளியீட்டுக்குழு**

## நன்றியுரை

எங்கள் குழுவிற்கு தேவகோட்டை முதல் பழனி வரை பாதயாத்திரை செல்லும் வழிகளில் அனைத்து உதவிகளையும் செய்யும் அன்பர்கள் அனைவருக்கும் எங்களது மனமார்ந்த நன்றியை தெரிவித்துக்கொள்கிறோம்,

இம்மலர் வெளிவர விளம்பரங்கள் வாங்கிக்கொடுத்து உதவிய அன்பர்கள் :

**N.சிதம்பரம்**, கோவை,
**PL.லெஷ்மணன்**, ஈரோடு,
**R.M.சுரேஷ்குமார்**, சென்னை.

ஆகியோர்களுக்கு எங்களது நன்றியை தெரிவித்துக்கொள்கிறோம், இம்மலரை குறுகிய காலத்தில் நல்லமுறையில் அச்சிட்டு கொடுத்த ***விழுப்புரம் ஸ்ரீ கற்பக விநாயகர் பிரிண்டர்ஸ்*** திரு. **G.சிவனடியான்** அவர்களுக்கும். அட்டை சுவாமி படங்கள் தயார் செய்து கொடுத்த சிவகாசி திரு. **N.மணிவண்ணன்**, அவர்களுக்கும் மற்றும் நண்பர்கள் அனைவருக்கும் எங்களது நன்றியினை தெரிவித்துக்கொள்கிறோம்.

இங்ஙனம்
**சிங்காரவேலன் பாமாலை மலர் வெளியீட்டுக்குழு**





## விநாயகர் துதிகள்

ஐந்து கரத்தனை ஆனைமு கத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்தனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்து அடி போற்றுகின்றேனே — திருமூலர்

பாலும் தெளிதேனும் பாகும் பருப்புமிவை
நாலும் கலந்துனக்கு நான்தருவேன் கோலஞ்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீ யெனக்குச்
சங்கத் தமிழ் மூன்றுந்தா — ஔவையார்

வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் மாமலராள்
நோக்குண்டாம் மேனிநுடங்காது–பூக்கொண்டு
துப்பார் திருமேனி தும்பிக்கையான் பாதம்
தப்பாமல் சார்வார் தமக்கு — ஔவையார்

---

மங்களத்து நாயகனே மண்ணாளும் முதலிறைவா!
பொங்குதன வயிற்றானே பொற்புடைய ரத்தினனே
சங்கரனார் தருமதலாய்ச் சங்கடத்தைச் சங்கரிக்கும்
எங்கள்குல விடிவிளக்கே எழில்மணியே கணபதியே!

அப்பமுடன் பொரிகடலை அவலுடனே அருங்கதலி
ஒப்பிலா மோதகமும் ஒருமனமாய் ஒப்பித்து
எப்பொழுதும் வணங்கிடவே எனையாள வேண்டுமென
அப்பனுக்கு முந்திவரும் அருட்கனியே கணபதியே!

பிள்ளையாரின் குட்டுடனே பிழைநீக்க உக்கியிட்டு
எள்ளளவும் சலியாத எம்மனத்தை உமக்காக்கித்
தெள்ளியனாய்த் தெளிவதற்குத் தேன்தமிழில் போற்றுகின்றேன்
உள்ளியதை உள்ளபடி உகந்தளிப்பாய் கணபதியே!

இன்றெடுத்த இப்பணியும் இனித்தொடரும் எப்பணியும்
நன்மணியே சண்முகனார் தன்னுடனே நீஎழுந்து
என்பணியை உன்பணியாய் எடுத்தாண்டு எமைக்காக்க
பொன்வயிற்றுக் கணபதியே போற்றியெனப் போற்றுகின்றேன்!

— துர்க்கை சித்தர்

## கற்பக மூர்த்தி

கற்பகமூர்த்தி ஐயா கற்பகமூர்த்தி
கற்பகமூர்த்தி ஐயா கற்பகமூர்த்தி

மூலமுதல் ஆனவனே கற்பகமூர்த்தி நீ
முன்வந்து காத்தருள்வாய் கற்பகமூர்த்தி
காலமிது காலமிது கற்பக மூர்த்தி – என்
கவலைகளை தீர்த்தருள்வாய் கற்பகமூர்த்தி (கற்பக மூர்த்தி)

நல்ல நல்ல சேதிவரும் கற்பகமூர்த்தி – மனம்
நாடியது தேடிவரும் கற்பகமூர்த்தி
வல்லமைகள் பொங்கி வர கற்பக மூர்த்தி
வணங்கி வந்தால் வெற்றிவரும் கற்பக மூர்த்தி (கற்பக மூர்த்தி)

வெற்றிதர வருவாயே கற்பகமூர்த்தி – நான்
வேண்டும் வரம் தந்தருள்வாய் கற்பகமூர்த்தி
உற்றதுணை தெய்வமுமே கற்பகமூர்த்தி – உன்னை
ஓதுவதும் செய்தவமே கற்பகமூர்த்தி (கற்பக மூர்த்தி)

## சரஸ்வதி துதி

வெள்ளைக்கலை யுடுத்தி வெள்ளைப்பணி பூண்டு
வெள்ளைக் கமலத்தில் வீற்றிருப்பாள் – வெள்ளை
அரியா சனத்தில் அரசரோடு என்னைச்
சரியாசனம் வைத்த தாய்.

அம்மா கலைவாணி எனக்கு அருள்வாய் மகராணி
சிம்மாசனமாய் எந்நாவினிலே தேவி வருவாய் நீ
வேதமுதல் ஆனான் – பிரமன் வித்தை தொழில் ஆனான் அவன்
காதல் இளங்கிளியே என்றும் கைதொழுவேன் உனையே
வெள்ளை மலர்மேலே–அன்னம் வீற்றிருந்தால் போலே
மெள்ள எழுந்தருள்வாய்–அம்மா வேண்டும் வரம் தருவாய்
ஏது படித்துவிட்டேன் பெரிதாய் என்ன முடித்துவிட்டேன்? உன்
காலைப் பிடித்துவிட்டேன்–அதனால் கவிதை வடித்துவிட்டேன்
பூவும் உனக்காக தேடும் பொன்னும் உனக்காக
கூடும் எனக்காக அருள்வாய் கோடிக்கணக்காக

அருள்மிகு கோடையாண்டவர்,
வல்லக்கோட்டை



பல்லவி

ஜெயதி ஷண்முகம்–ஜெய ஜெயதி ஷண்முகம்
ஜெயதி ஷண்முகம்–ஜெய ஜெயதி ஷண்முகம்

சரணங்கள்

பரம தெய்வம்–பசுபதி அநுக்ரஹம்
பதித பாவனம்–பரி பால் ஸ்ரீகரம்
சரவணதாரகம்–தேவ தேவ நாயகம்
சிவசுதம்குகம் ஜெய ஜெயதி ஷண்முகம்
ஹரிஹ ராஸ்யம்–கன ஹார நுபுரம்
ஹஸ்த்வாதசம்–ஹர ஹரப ராத்பரம்
சிரஷ்டானனம்–ஜெய செந்தி லாதிபம்
சிவசுதம்குகம்–ஜெய ஜெயதி ஷண்முகம்
ஆபத் பாந்தவம்–அனாதரக்ஷகம்
அபயஜீவிதம்–க்ரு பானந்தம் சிவம்
தீப தர்சனம்–ஜெய ஜெயவ னோகரம்
சிவசு தம்குகம்–ஜெய ஜெயதி ஷண்முகம்
கஜஸ கோதரம்–கலி கல்மி ஷம்ஹதம்
கவிக லாதரம்–சங் கட்ஹ ரம்சுகம்
ஆறு மாமுகம்–எனை ஆளும் பூமுகம்
அஞ்சும் நெஞ்சகம்–திரு வடி அடைக்கலம்
சீறு பாதகம்–மயில் சேவ லாய்வரும்
சிவசுதம்குகம்–ஜெய ஜெயதி ஷண்முகம்
பல்வ கைக்கலாம்–பல பலவ கைநலம்
பலவ கைத்திறம்–பல பலவ கைத்தலம்
சில்த மிழ்ப்பதம்–தந்து சேவிப் பேன்தினம்
சிவசு தம்குகம்–ஜெய ஜெயதி ஷண்முகம்
மலைபிளந்தவேல்–கடற் வயிற ளந்தவேல்
மகிமை கொண்டவேல்–அறம் வாழ நின்றவேல்
சிலைஎழிற்கைவேல்–வாழ்க திருஅ ருட்கைவேல்
சிவசுதம்குகம்–ஜெய ஜெயதி ஷண்முகம்
வெல்க குஞ்சரி–வெல்க வேடர் மஞ்சரி
வெல்கபூமுடி–வெல்க வெல்க சேவடி
செல்க துயரெலாம்–வந்து சேர்க நலமெலாம்
சிவசு தம்குகம்–ஜெய ஜெயதி ஷண்முகம்
ஜெயஷ டானனம்–ஜெய ஜெயபு யாசலம்
ஜெயப தாம்புயம்–ஜெய ஜெயஷ டாக்ஷரம்
ஜெயப்ர பாகரம்–ஜெய ஜெயக்ரு பாகரம்
சிவசு தம்குகம்–ஜெய ஜெயதி ஷண்முகம்

## ஸ்ரீ நடராஜர் பதிகம்

ஓம் நமச்சிவாய ஓம் ஓம்நமச்சிவாய
ஓம் நமச்சிவாய ஓம் ஓம்நமச்சிவாய

## பதிகம்

அங்கும்இங்கும் எங்குமாய் அமைந்த தேவதேவனே!
ஆதியாய் அநாதியாய்ச் சமைந்த ஜோதிரூபனே!
மங்கலங்கள் யாவும்நல்கும் அம்பிகை மணாளானே
மைந்தன்செய்யும் பூஜையில் மகிழ்ந்தருள் நடேசனே!

எந்தஇல்லம் ஆயினும் இருந்தஇல் சிதம்பரம்
எடுத்தபீடம் ஆலயம்: தொ டுத்தகூரை கோபுரம்:
செந்தமிழ்ச்சொல் மந்திரம்: திருந்தும்அன்பே ஆகமம்:
சிவந்தபாத பங்கையம் உவந்தருள் நடேசனே!

மன்றிலே எடுத்தகால்என் மனையிலும் எடுத்துவை:
மனதிலே நினைத்தநன்மை விரைவிலே முடித்துவை:
என்றும்தீமை அணுகிடாமல் ஈசனே தடுத்துவை:
ஏத்தும்அன்பர் குழுவில்என்னைச் சேர்த்துவை நடேசனே!

ஆ–பயந்த ஐந்தினோடு பால், பழம், பஞ்சாமிர்தம்
ஆலைவாய்க் கரும்பு, தெங்கு தேன், சுகந்த சந்தனம்
நீ–பயந்த யாவையும் நினக்களித்தேன் ஈசனே!
நேர்த்தியாய் அனைத்தும் ஆடிவாழ்த்துவாய் நடேசனே!

அட்டநாக பூஷணம் அளிக்கவல்லன் அல்லனே!
ஆனை, மான், சிறுத்தைவேட்டை ஆடவல்லன் அல்லனே!
இட்டமாலை ஆடையோடு தொட்டுவைத்த சந்தனம்
என்றும்நல்க வல்லன்வல்லன் கொண்டருள் நடேசனே!

வில்லினால் அடிக்கவோ? வீசுகல் பொறுக்கவோ?
மிதித்தபோது கை, பிரம்பை மேலும்நான் எடுக்கவோ?
நல்லபிள்ளை என்னைஆளும் நாதனும்நீ அல்லவோ?
நாளும்நான் படைத்தசொல்லும் பூவும்கொள் நடேசனே!

ஆட, நீ எடுத்ததாய் அறிந்தவர் இயம்புவர்
அல்ல அல்ல என்தலைமேல் சூடஎன்று சொல்கிறேன்!
ஈடில்லாத தெய்வம்நீ இடப்புறம் எடுத்தகால்
எந்தநோக்கில் என்றுசொல்ல வந்தருள் நடேசனே!

மழுவெடுத்(து) எதைவிளக்க மன்றுதோறும் ஓடினாய்!
மதியெடுத்த சிரம்இருக்க மத்தனாய்ஏன் ஆடினாய்!
கழுதெடுத்து நடனம் ஆடும் காட்டில்என்ன தேடினாய்!
கையில்நான் எடுத்ததூபம் கொள்ளுவாய் நடேசனே!

எடுத்ததூபம் ஆதியாவும் ஏற்றருள் மகேசனே!
இன்றுநான் படைத்தயாவும் உண்ணுவாய் சபேசனே!
தடுத்தபண்டை வினையகற்றி தாங்குவாய் சர்வேசனே!
சரணம்உன்னை அன்றிஏது? தாங்குவாய் நடேசனே!

வாழிநீபடைக்கும் தெய்வம் மலர்அணை அமர்ந்ததாம்!
வகுத்தளிக்கும் தெய்வம்கூட அரவணை கிடந்ததாம்!
ஊழிதோறும் ஐந்தொழில் உவந்துசெய்யும் ஈசனே!
ஒய்ந்துசற்றென் நெஞ்சணைக்கண் சாய்ந்துகொள் நடேசனே!

ஓம்நமச்சிவாய ஓம் சிவாயநம: ரூபனே!
ஓதும்ஐந்து சபையில் ஆடும் பாதனே! சங்கீதனே!
வாமியாய்த் தழைத்தசிவ காமிகாதல் நேசனே!
மாறிலாத கருணைநீ வழங்குவாய் நடேசனே!

*அருட்கவி. கு.செ.இராமசாமி*

## வைத்தியநாதர் பதிகம்

உன்னையன்றி வேறுதெய்வம் உள்ளம் எண்ண வில்லையே
ஓசைகொண்ட தமிழினாலே பாடுவேன் உன் பிள்ளையே
அன்னை, பிள்ளை மழலையில் அகம் குழைதல் போலவே
அணிய வேண்டும் எனது சொல்லும் ஆதி வைத்ய நாதனே

தேசமெங்கும் கோயில்கள் திறந்து வைத்த வாயில்கள்
தேடும் அன்பர் யார்க்கும் இன்பம் கோடிநல்கும் மூர்த்திகள்
பூசைகொள்ளும் தேவர்கள் யாவையும் நின் கோலமே
போற்றும் என்னை வாழ்விலேமுன் நேற்றுவைத்ய நாதனே

ஓதும் நாலு வேதமும் உலாவு திங்கள், ஞாயிறும்,
உகந்த கந்த வேள், சடாயு உண்மை அன்பின் இராமனும்
பாதபூசை செய்யவே பலன் கொடுத்த ஈசனே
பாதிகொண்ட தையலோடு வாழி வைத்யநாதனே

ஆலகால நஞ்சை நீ அமிர்தமாய் அருந்தினாய்
அடித்து வைத்த பன்றியின் இறைச்சியும் விரும்பினாய்
பாலன் நஞ்சு தேடவோ? பன்றி வேட்டை ஆடவோ!
படைத்தபா சுவைத்தருள் பராவும் வைத்ய நாதனே

வாத, பித்த, சிலேட்டுமம் வகைக்கு நூறு நோய்க்குலம்
மனிதராசி அறிகிலாத புதிய நோய் தினம், தினம்
வேதனை வளர்ந்ததன்றி வென்றதோ மருத்துவம்?
மேலும் என்ன கூறுவேன்? கண்பாரும் வைத்ய நாதனே!

ஆயுர் வேதம் ஆங்கிலம் அமைந்த சித்த வைத்தியம்
ஆனவேறு வகையிலும் அனேகமான பத்தியம்
பாயும் நோயும் போனதோ? பலித்து நன்மை ஆனதோ?
பாவியேன் என் கூட்டத்தோடுன் பாரும் வைத்யநாதனே!

அங்குமிங்கும் ஓடி என்ன? அகலவில்லை நோய்களே
ஆடி என்ன? பாடி என்ன? விலகவில்லை பேய்களே
மங்கை பாகன் நீயிருக்க எங்கு செல்வோம் சேய்களே?
மனமிரங்கி அருள் வழங்கு வாழி வைத்யநாதனே!

கண்ணில்லாத குருடருக்கும் கண்கொடுக்கும் ஈசனே
கால் இல்லாத முடவருக்கும் கால் கொடுக்கும் போஜனே
எண்ணில்லாத நோயின் கூட்டம் இடமில்லாமல் ஓடவே,
என்னுளே எழுந்தருள்வாய் அண்ணல் வைத்யநாதனே!

சிந்தையில் இருந்த நோய் செயல்களால் விளைந்த நோய்
திசுக்குள், தோல், நரம்(பு) எலும்பு, குருதியில் செறிந்த நோய்
எந்த நோயும் போக்குவாய் எதிர் வராமல் ஆக்குவாய்
இசைந்தகந்த புரியிலே அமர்ந்த வைத்யநாதனே!

நாம, ரூப பேதமற்ற ஞான ஜோதி மூர்த்தியே
நாளும் உன்னை அன்பு செய்து பாடுகின்றேன் வாழ்த்தியே
சாம வேத கீதனே சடாயு போற்றும் பாதனே
தஞ்சம், தஞ்சம், தஞ்சம், என்னைத் தாங்கு வைத்யநாதனே!

## இறைவியர் வணக்கம்

கலையாத கல்வியும் குறையாத வயதும் ஓர்
கட்டுவாராதநட்பும்
கன்றாத வளமையும் குன்றாத இளமையும்
கழுபினியிலாத உடலும்
சலியாத மனமும் அன்பு அகலாத மனைவியும்
தவறாத சந்தானமும்
தாழாத கீர்த்தியும் மாறாத வார்த்தையும்
தடைகள் வாராத கொடையும்
தொலையாத நிதியமும் கோணாத கோலும் ஒரு
துன்பமில்லாத வாழ்வும்
துய்யநின் பாதத்தில் அன்பும் உதவிப் பெரிய
தொண்டரொடு கூட்டு கண்டாய்
அலையாழி அரிதுயிலு மாயனது தங்கையே
ஆதிகடவூரின் வாழ்வே
அமுதீசர் ஒரு பாதம் அகலாத சுகபாணி
அருள்வாமி அபிராமியே

## அபிராமி அந்தாதி

தனந்தரும் கல்விதரும் ஒருநாளும் தளர்வறியா
மனந்தரும் தெய்வடிவுந்தரும் நெஞ்சில் வஞ்சமில்லா
இனந்தரும் நல்லன எல்லாந்தரும் அன்பரென்பவர்க்கே
கனந்தரும் பூங்குழலாள் அபிராம் கடைக்கண்களே!

ஆத்தாளை எங்கள் அபிராம வல்லியை அண்டமெல்லாம்
பூத்தாளை மாதுளம் பூநிறத்தாளைப் புவியடங்கக்
காத்தாளை அங்கையில் பாசாங்கு சமுங் கரும்புவில்லும்
சேர்த்தாளை முக்கண்ணியைத் தொழுவார்க்கொரு தீங்கில்லையே...

## உமையவன் பாமாலை

### காப்பு

அண்டங்கள் ஏழினோ டேழும் அப் பாலுமாய்
ஆன எம் ஞான தேவா!
அறுகுடன் தும்பையும் ஆத்தியும் கொன்றையும்
அணிசெய்யும் அழகு மார்பா
எண்டிசை நடுங்கவே இறைவனார் தேரின் அச்(சு)
இற்றிட செய்த வீரா
இலகு புகழ் முனிசொல்ல உலகுபுகழ் பாரதம்
எழுதிடும் கவிதை நேசா!
தண்டையொடு கிண்கிணி சதங்கயையும் கொஞ்சவே
சந்தடை கொள்ளும் பாதா!
சரவணன் அறுமுகன் மணமகன் ஆகவே
தண்ணளி புரிந்த ஈசா
தெண்டிரை சூழுலகில் தேவிரா சேச்சுவரியின்
தெய்வமாக் கருணை பாட
சித்தமிசை குடி கொண்ட தத்துவ விநாயகா
திருவருள் தந்து நீகா

சிந்தூரம், குங்குமம், செவ்வானம், அவ்வானம்
திகழ வருகதிரின் உதயம்
தேசு மிகு மாணிக்கம், திரு ஏறு கமலம் அச்
செங்கமலம் அஞ்சு பவழம்
மந்தாரம் மழை நாளில் வரும் இந்தர கோபம் அவ்
வண்டூ ரும் மலையில் நறவம்
மான்மதம், செங்குருதி போன்மலரும் மாதுளம்
மாதுளம் சிதறும் முத்தம்
செந்தீயின் வண்ணம் என வேசொல்லு(ம்) மேனியும்
செப்பரிய அழகு வடிவும்
சிங்கா தனத்திலும் சிவனார் மனத்திலும்
சீர் கொண்டிலங்கும் எனினும்
எந்தாய்நின் பேர் சொல்லும் ஏழையேன் அறிவிலும்
என்றென்றும் திகழ அருள்வாய்!
இறைவிஎனை ஆண்டருளும் இராஜராஜேஸ்வரி
இமயமலை வாழும் உமையே!

தேறாத கவிஎனினும் மாறாத காதலால்
திரு முன்பு சாற்றுகிறேன்!
சிந்தை அணுஒவ்வொன்றும் தேவி உனதே ஆகச்
செய்ய தமிழ் பாடுகின்றேன்!
ஆறாத துயருக்கும் அகலாத கவலைக்கும்
ஆரை நான் நொந்து கொள்வேன்
அறியாது பிழை செய்து சரியாக வதைபட்ட
அவலத்தை எங்கு சொல்வேன்
நீறாக வேநிருதர் புரமூன்றும் செற்ற உனை
நெஞ்சாரப் போற்றுகின்றேன்
நெற்றிவிழியால் எனது குற்ற மலை பொடியாக
நின்னருளை வேண்டுகிறேன்!
ஈறேதும் இல்லாத இன்பவடிவாக என்
இதயதள மீதும் ஒளிர்வாய்!
இறைவிஎனை ஆண்டருளும் இராஜராஜேச்சுவரி
இமயமலை வாழும் உமையே

சீரார் பெருந்துறையில் சிவயோக நாயகி
சிவகாமி தில்லை மன்றில்
தென்குமரி பகவதி திருவானைகாவினில்
திகழும் அகிலாண்டடேச்சுவரி
காரார் மதிற்கச்சி காமாட்சி, அங்கயற்
கண்ணிசெந்தமிழ்மதுரையில்
கங்கைவளநாடுடைய நங்கை விசாலாட்சி
காளிவாங் காள மண்ணில்
தாரர்சிவன் தோலும் தமிழும் விழைபவள்
சமயபுரம் அதனில் மாரி
தட்டாமல் கடவூரில் பட்டருக்கருள் செய்த
தையல் அபிராமவல்லி
ஏரார் மழைக்கண்ணி எண்ணரிய நின்கோலம்
யாவும் எமை ஆள வலவோ
இறைவிஎனை ஆண்டருளும் இராஜராஜேச்சுவரி
இமயமலை வாழும் உமையே

வானமும் பூமியும் மாறினும் மாறாத
வாய்மை வடிவான தேவி
வழிபாடு செய்பவர் குறைபாடு தீர்த்தின்ப
வாழ்வுதரும் ஆதி தேவி

தேனுமாய் அமுதுமாய் சித்தத்திலே நின்று
தித்தித் தினிக்கும் தேவி
சேராரின் மார்பை இருகூறாகவே செய்யும்
திரிசூலம் ஏந்து(ம்) தேவி
கானமும் சிற்பமும் கலைமலர் பலப்பலவும்
காணிக்கை கொள்ளும் தேவி
கற்பனையும் ஒப்பனையும் காலம் ஒரு மூன்றும்
கடந்த தேவதேவி
ஈனமொன்றண்டாத ஞானமாதேவி உனை
என் சொல்லி வாழ்த்துவோம் யாம்
இறைவினை ஆண்டருளும் இராஜராஜேச்சுவரி
இமயமலை வாழும் உமையே

கொற்றத் தமிழ்கொம்பன் குற்றம் மறைக்கநீ
கொட்டிக் கிழங்குவிற்றாய்
கூறுதமிழ் ஏட்டினை நீரிலும் நெருப்பிலும்
குலையாமல் காத்துநின்றாய்
வெற்றித் தமிழ்க்காள மேகமென வீணனையும்
மேதையாய் நீஆக் கினாய்
மெய்ஞானி சொற்றமிழை மெய்ப்பிக்க வானத்தில்
வெண்ணிலவு தோற்றுவித்தாய்
ஒன்றித் தலம்விட்டு வள்ளலார் பசிதீர
ஓடோடிச் சோறு தந்தாய்
உத்தமக் கவியரசன் குருபரன் முன்புநீ
ஒளிசிந்த நடைப யின்றாய்
இற்றைக் கென் தமிழோடும் சற்றுவிளையாடி நீ
இன்னருள் புரிய வருவாய்
இறைவினை ஆண்டருளும் இராஜராஜேச்சுவரி
இமயமலை வாழும் உமையே

மாரியாய் மேரியாய் முகமது நபிக்கருளி
வந்த ஒரு மாசக்தியாய்
மனவாக் கிறந்திருவருளாய் மதங்கள் தோறும்
வாழ்கின்ற தெய்வம் நீயே
ஓரிடம் ஒருகுணம் ஒருநிலை ஒருருவம்
ஒருபெயர் ஒருவிகற்பம்
ஒன்றுமில்லாத படி ஒவ்வொன்றும் தானாகி
உணர்வரிய பிரமம் நீயே
ஆரியம் திராவிடம் ஆங்கிலம் சீனமென
அமைகின்ற மொழிகள் நீயே

ஆமென்றும் இல்லையென அறுதியுடன் வாதித்தும்
அடைவரிய எல்லை நீயே
யாரென்ன சொன்னாலும் யான் உன்னை ஒரு நாளும்
ஐயுற்ற தில்லை தாயே
இறைவி எனை ஆண்டருளும் இராஜராஜேஸ்வரி
இமயமலை வாழும் உமையே

காற்றைப் படைத்தவள் நீயென்ற போதிலும்
கவரிகள் வீசுகின்றோம்
கனலும் உன் வடி வெனிலும் கற்பூர தீபங்கள்
கமழ்தூபம் காட்டுகின்றோம்
ஆற்றையும் கடலையும் அருளிய நின் மேனிக்கும்
அபிடேக நீர் சுமந்தோம்
அங்கிங் கெனாதுவெளி எங்குமுள நீ உறைய
ஆங்காங்கு கோயில் செய்தோம்
போற்றரிய நின்வடிவைப் பொன்னிலும் கல்லிலும்
பூசித்து வாழ்த்துகின்றோம்
புவிமீது நீ தந்த பொருளன்றி வேறொன்றைப்
போய்தேடி எங்குபெறுவோம்
ஏற்றருள வேண்டும் என் இதயத்தை என் அன்பை
இணைமலர்த் தாளில் வைத்தோம்
இறைவிஎனை ஆண்டருளும் இராஜராஜேச்சுவரி
இமயமலை வாழும் உமையே

என்ன கவி பாடினால் உன் மனது மாறுமோ
என்மீது கருணை வருமோ
எவர்மூலம் அணுகினால் யான் செய்யும் விண்ணப்பம்
எளிதாக நிறைவேறுமோ
சொன்னபடி கேளாமல் துயர் செய்யும் என்மனம்
தூய்மைபெற வழியுமுண்டோ ?
சோதித்து வாட்டுவது போதுமென உன்னிடம்
சொல்லுபவர் யாருமில்லையே ?
சின்னமலர் என்றாலும் தேன்துளி சுமந்து தவம்
செய்துவரும் மலரல்லவோ ?
செப்புவது பிழைபடினும் செவியின்பம் தரவல்ல
சேய்மழலை மொழியல்லவோ ?
இன்னபடி தான் பெற்ற பிள்ளைதுயர் எய்துகையில்
இளகாத தாயுமுண்டோ ?
இறைவிஎனை ஆண்டருளும் இராஜராஜேச்சுவரி
இமயமலை வாழும் உமையே

தாய்கை பிடித்தபடி தளிர்நடை பயின்றுனது
சபையேறி வரவில்லையோ ?
தந்தையார் உபதேச மந்திரம் பொழிந்தபடி
சந்நிதியில் தொழவில்லையோ ?
வாய்திரந்தால் அங்கு வருதுன் நாமம் என
வாழ்கின்ற மகனில்லையா ?
மாதரார் போகத்தில் மயங்கிடும் காலத்தும்
மறவாத மனமில்லையா ?
ஓய்வின்றி நான்பாட உவப்போடு நீகேட்க
ஒப்பியதும் நினைவில்லையா ?
ஓடோடி வந்தெனது தீராத துயர்தீர்க்க
உன் நெஞ்சில் கனிவில்லையா ?
ஈகின்ற என் தலைவி நீ இல்லையா ? உன்றன்
இசைவாணன் நானில்லையா ?
இறைவிளனை ஆண்டருளும் இராஜராஜேச்சுவரி
இமயமலை வாழும் உமையே

## அம்பிகை அழகு தரிசனம்

கருவிலே திருவுடைய நல்லறி வாளர்தமது
கனிவான நட்பு வேண்டும்
காசு பண ஆசைகளில் வேசையரப் போலாடிக்
கறவாத புத்திவேண்டும்
அருளுடைய பெரியவர்கள் ஆசிவேண்டும் நெஞ்சில்
அகலாத அன்பு வேண்டும்
ஆதரவில்லாதவரில் நல்லவரை பார்த்துதான்
ஆதாரமாக வேண்டும்
மருளுடைய மான் போலும் மங்கை ஒரு தேவி என்
மனையாட்டியாக வேண்டும்
மானமென்னும் ஒன்றிலே மாறாத குறிவைத்து
வாழ்க்கையை காக்க வேண்டும்
இருள்அகல ஒளிவீசும் இறைவனது தேவியே
இவைசேர வேண்டும் எனையே
இனியதொரு மதுரை நகர் அரசு வீற்றிருக்கின்ற
இளைய மினாட்சி உமையே!

ஆழ்கடலில் போட்டாலும் அக்கினியிலிட்டாலும்
அழியாத மேனி வேண்டும்
அடுநோய்கள் பலகூடி உடல்மீதுதொடுத்தாலும்
அலராத நெஞ்சம் வேண்டும்
ஊழ்வினைகள் ஒன்றாகி உயிர்வதை செய்தாளும்
ஒளிசிந்தும் இதழ்கள் வேண்டும்
உச்சத்தில் நின்ற படி கீழே விழுந்தாலும்
உலையாத திறமை வேண்டும்
பாழ் வழியிலே தூங்கிப் பசியோடிருந்தாலும்
பக்தியில் உறுதி வேண்டும்
பயமாகத் தோன்றுவதை நயமாக மாற்றுகிற
பலமான அறிவுவேண்டும்
சூல்வதெல்லாம் நீ என்ற துணிவுதா தேவியே
சொக்கனின் அன்பு மனையே
தொல் மதுரை நகருக்கு பல்லாண்டு பாடிடும்
தூயமீனாட்சி உமையே!

முன்னாளில் சென்றதைப் பின்னாளில் நினைக்கின்ற
மூடமை தீர்க்க வருவாய்
மூதறிஞர் சொல்கேட்டும் பேதமைமாறாத
முறைகேடு நீக்க வருவாய்
பொன்னான காலத்தை பாழ்செய்து தூங்காமல்
புகழ்மாலை சூட்ட வருவாய்
பொய்யர்கள் நடுவிலும் நல்லதே நினைக்கின்ற
புத்தியை கொண்டு வருவாய்
மன்னாதி மன்னனும் மண்டியிட்டே என்னை
வணங்கிடும் பெருமை யருள்வாய்
மலைமீது நின்றாலும் அவமான ஆணவ
மண்டாமல் காக்க வருவாய்
தென்னாடும் வடநாடும் ஒருங்கே பணிகின்ற
செவ்வமலை ராஜன் மகளே
திருமதுரை நகராளும் தருமதுரை ராணியே
தெய்வ மீனாட்சி உமையே

வீட்டுக்குள் நகைவைத்து பூட்டிவிட்டால் அங்கு
வெளியிலே நீ நிற்கிறாய்
விளக்கிலே நெய்யின்றி விம்முவார் கண்முன்பு
விளக்கமே நீவைக்கிறாய்
காட்டிலே விட்டாலும் கண்கட்டி வித்தைபோல்
கைதந்து நீ காக்கிறாய்
காணாத பிள்ளையைத் தேடினால் நீ வந்து
கருணையோடெனை காக்கிறாய்
கூட்டிலே விட்டாலும் குயில்முட்டை தன்னைக் காத்துக்
குஞ்சாக நீ ஆகிறாய்
குழியிலே எறும்புக்கும் கோட்டிலே யானைக்கும்
கொள்கையை நீ சொல்கிறாய்
ஏட்டிலே படித்தாலும் எப்போதும் இனிக்கின்ற
ஏகாம்பரன் தேவியே
எழில்பொழியும் காஞ்சிநகர் அரசுபுரி ராணியே
ஏதில் காமாட்சி உமையே!

ஊமைகுழந்தைக்கு நின் மகன் வேல்கொண்டு
ஓ மென்று எழுதவில்லையோ
உழல்கின்ற பாண்டவர் பாரதப் போருக்கு
உன் அண்ணன் உதவவில்லையோ
காமனை கண்ணாலும் திரிபுரம் சிரிப்பாலும்
கணவனை எரிக்க வில்லையோ
காட்டிலும் மேட்டிலும் கரையிலும் நின் பிள்ளை
கவலைகள் தீர்க்க விலையோ
சாமத்தில் உன்நாதன் சிவனுக்கு எனைப்பற்றி
சரியாக சொல்லவிலையோ
சரிகம வென்றே பாடி பார்க்கிறேன் நீ இன்னும்
சங்கீதமாக விலையோ
எமன் நெருங்காமல் என் வாழ்வு காக்கின்ற
ஏகாம்பரன் தேவியே
எழில் பொழியும் காஞ்சிநகர் அரசுபுரி ராணியே
ஏதில் காமாட்சியே உமையே!

கருவிலே நான் தூங்கி காலங் கழிக்கையில்
காற்றாக வந்தவள் நீ
கையிலே பிள்ளையாய் பையக்கிடக்கையில்
கனிந்த பாலானவள் நீ
உருவிலே பெரிதாகிப் பள்ளிக்குச் செல்கையில்
உடன் வந்த கல்வியும் நீ
உறவிலே ஒன்றாகி திருமணம் நடக்கையில்
ஒளிமாலை ஆனவள் நீ
திருவோடு பிள்ளை என்மனையில் பிறக்கையில்
சீர் தந்த ஆட்சியும் நீ
தேசங்கள் யாவிலும் தொழில் செய்ய செல்கையில்
செல்வமாய் நின்றவள் நீ
குருவான குமரனின் அறிவான அன்னையே
கோல நடராசன் துணையே
கோவிலிடை அந்தணர்கள் கூடிவரும் தில்லையில்
கொஞ்சும் சிவகாமி உமையே!

ஆசையுடன் ஒரு நூறுபாடலுனக் கணிவித்த
அபிராமி பட்டருக்கு
அமாவாசை யன்றந்தநிலவுவரச் செய்தாயே
அதுபோதும் பக்தருக்கு
தாசிஎனச் சொன்னாலும் தகைமை நிலைமாறாத
தங்கமயில் மாதவிக்கு
தங்கஇடம் தந்தாயே தனியுறவு கொண்டாயே
சாட்சிஇது காதலுக்கு
பூசுவது வெண்ணீரு பூணுவது திலகமென
பூசைசெய்யும் பெண்களுக்குப்
போனபிறப் பென்றாலும் வந்தபிறப் பென்றாலும்
புகழ்தந்தாய் கண்களுக்கு
தேசுலவும் சோழர்களின் காலம் முதல் இன்று வரை
தெய்வநிலை பெற்ற சிலையே
திருமுகமும் குங்குமமும் ஒருசேர ஒளிவீசும்
திருக்கடவூர் அபிராமியே!

ஆத்தாளுன் சந்நிதியை அறியாத பிள்ளைநான்
ஆனாலும் கவிதை சொன்னேன்
ஆடிவரும் கங்கையில் மூழ்காத காக்கை நான்
ஆனாலும் பேறுபெற்றேன்
காத்தாளும் மங்கலக் கையோடு முகத்தையும்
கற்பனையில் காணுகின்றேன்
கட்டாயம் உன் அருளைப் பெற்றேநான் வாழ்கிறேன்
காலத்தில் அங்கு வருவேன்
சேர்த்தாளும் அன்னையே சேய்செய்த பாவத்தைச்
சிறிதும் நீ மதிக்க வேண்டாம்
சிற்றறிவை ஆசானின் பேரறிவை காப்பதுவும்
தேவி நீ மறந்த ஒன்றா
பூந்தாமரையெனப் பொங்குகிற நாகத்தைப்
புரிந்தவன் கலந்த மயிலே
புகழ்பெருகு காசிநகர் தகவுடைய தேவியே
பூவைவிசாலாட்சி உமையே!

மானிடம் பெரிதென்று பூமியிற் பிறந்தநாள்
மதிகெட்டுச் சொன்னதுண்டு
மண்ணிலே புழுபூச்சி தன்னை விட ஈனமாய்
வாழ்க்கையைப் பார்த்ததுண்டு
ஊனுடல் மண்கேட்க உயிர்தனை நீ கேட்டு
ஊடாடி நிற்ப துண்டு
ஓங்கி வளர் மரங்களும் பாம்புடன் வாழ்வதை
உளம் நொந்து பார்ப்பதுண்டு
நானிடர்ப்பட்டபின் மானிடப் பிறவியை
நலமிலாப் பிறவி என்று
நன்றாகக் காண்கிறேன் மன்றாடி நிற்கிறேன்
நாடாதோசொர்க்க மென்று
தேனிடம் மொழிவாங்கி விசுவேசன் மடியிலே
சிந்திடும் அன்பு மயிலே
சிறுகூடற் பட்டி வரை மறுபிறவி எடுத்தாயென்
தெய் விசாலாட்சி உமையே!

உள்ளநாள் வரையிலே நன்மையும் தீமையும்
ஒன்றென்றே எண்ணவரம்தா
உறவோடு பகையையும் இரவோடு பகலையும்
ஒருமித்து பார்க்க வரம் தா
வெள்ளம்போல் செல்வமும் வறுமையும் சமமென்று
விளையாடும் வாழ்க்கை வரம் தா
விதியென்றும் வலியதே மதியென்றும் சிறியதே
வினை தீர்த்து நல்ல துணைதா
பள்ளம் போல் இகழையும் மலை போல் புகழையும்
பந்தாடும் வீர நிலைதா
பழிவாங்கும் பசியையும் பலசுவை உணவையும்
பதறாமல் கொள்ள வரம் தா
அள்ளியிடும் கையினால் அர்த்தசா மத்திலும்
அருள் செய்யும் அன்பு மயிலே
அறமுடைய வணிகர் குலம் சிலைவைத்த தேவியே
அழகு விசாலாட்சி உமையே

*கவியரசு. கண்ணதாசன்*

## மங்களச் செல்வி

மங்களச் செல்வி அம்மா அங்கயற்கண்ணி
அங்கயற்கண்ணி அம்மா மங்களச் செல்வி

தங்கரதம் ஏறிவரும் மங்களச்செல்வி–தமிழ்ச்
சங்கம் வைத்த மதுரையிலே அங்கயற்கண்ணி
எங்கிருந்து நினைத்தாலும் அங்குவருவாய்–அம்மா
எப்போதும் என்நாவில் பொங்கி எழுவாய் தங்க)

சோலையிலே ஆடிவரும் நீலமயிலே–எங்கும்
சொக்கத் தங்கம் பூசிவரும் மாலைவெயிலே
பாலையிலே ஓடிவரும் ஜீவநதியே–என்
பாடலிலே ஏறிவரும் ஞானஒளியே

பூவிருந்த இடம்கூடக் கமகமக்கும் பசும்
பொன்னிருந்த இடம்கூடப் பளபளக்கும்
நீயிருக்கும் இடம்எனது மனம் இல்லையா? – அது
நொறுங்கிவிடும் வண்ணம் இங்கே தினம் தொல்லையா? – (தங்க)

பார்வையிலே காப்பாற்று மீன்போல–அதிகப்
பாரம் அம்மா நீ தாங்கு தூண்போல
வேர்வைதனைத் துடைத்துவிடு தாய்போலே–எனது
வீட்டில் வந்து விளையாடு சேய்போலே (தங்க)

*அருட்கவி. கு.செ. இராமசாமி*

## தையல் நாயகி பாமாலை

எள்ளுப்பூ மூக்கு! எழிற்குவளையம் பூக்கண்கள்!
இயல்பான அழகு வடிவம்!
இனியமுகம் தாமரை! இரு செவிகள் செந்தாழை!
இறைவி நிறம் நல்ல பவளம்!
கள்ளிருக்கும் ரோஜாப்பூக் கன்னங்கள்! அல்லியில்
கடைந்ததோர் இரண்டு கால்கள்!
கைகளும் விரல்களும் கனகாம்பரம் மல்லி!
கற்பகப் பூவில் தோள்கள்!
புள்ளிருக்கும் வேளூர் பூவையுன் அங்கமெல்லாம்
பூக்களாய் மலர்ந்திருக்க
பூவுடல்கொண்டவளை வர்ணித்துப் பாமாலை
பூமாலையோடு தந்தேன்
வல்லவள் உன் அருளாலே வரும் துயரைப் போக்கியொரு
வரம் தந்து காக்கவருவாய் – அம்மா
வைதீஸ்வரன் கோவில்வளர் தையல் நாயகியே!
வளம் காண வைக்கும் உமையே!

பால்கேட்டு அழுததோர் பிள்ளைக்குச் சீர்காழிப்
படித்துறையில் பால் கொடுத்தாய்!
பச்சை வெற்றிலைதுப்பிக் கவிகாள மேகத்தைப்
பாட்டரசன் ஆக்கி வைத்தாய்!
வேல் கேட்ட பிள்ளைக்குச் செந்தூரில் சமர்செய்ய
விருப்பமுடன் வேல் கொடுத்தாய்!
விளையாடும் ஏழரை சனியோடு கிரகங்கள்
விலகிடும் வழி அமைத்தாய்!
நூல் கேட்ட ஞானத்தில் நூறுகவி பாடுமெனை
நோக்கி நீ எது கொடுத்தாய்!
நொடிப்பொழுதில் என் வாழ்வில் படிப்படியாய் துயரங்கள்
நுழைவதற்கு ஏன் விடுத்தாய்?
வாழ்வரசி இனி எனது வருங்காலம் செல்வங்கள்
''வளம்காலம்''ஆக்க வருவாய்!
வைத்தீஸ்வரன் கோவில் வளர்தையல் நாயகியே!
வளம்காண வைக்கும் உமையே!

"தா" என்று கேட்டவுடன் கொடுப்பதனால் தானுன்னைத்
தாய் என்று சொல்லிவைத்தார்!
தலைமகனுன் சந்நிதியில் கலைமகளின் அருளாலே
தமிழ்பாடி வரங்கள் பெற்றார்!
சேய்ஒன்று எதிரினிலே கதறுவது கேட்காமல்
செவிமூடி நிற்கலாமோ!
சிறுபிழைகள் இருந்தாலும் மன்னித்து அருள் காட்டும்
தேவியவள் நீயல்லவோ!
ஆயகலை அத்தனையும் அறிந்தவனை நோய்நோடிகள்
அணுகவிடல் முறையாகுமோ!
அரிய தொரு செல்வத்தை உரிய மகன் ஏற்காமல்
அனுதினமும் வாடலாமோ?
வாயுவென வேகமாய் வந்தெனது துயர்தீர்த்து
மகிழ்ச்சியினைக் கொடுக்க வருவாய்
வைத்தீஸ்வரன் கோவில் வளர்தையல் நாயகியே!
வளம்காண வைக்கும் உமையே!

தங்கநிகர் குணத்தோடு தைரியமும் தருகின்ற
தமிழ்ச் செல்வி போற்றி! போற்றி!
தரணியில் புகழ்காண வரமளிக்கும் சுந்தரியாம்
தாமரைப்பூ மாது போற்றி!
மங்கையருக்கு மாலைகளும் மன்னவர்க்கு வேலைகளும்
மகிழ்ந்தளிக்கும் அரசி போற்றி!
மாதரசி உண்ணா மலை அழகு சிவகாமி
மங்கை மீனாட்சி போற்றி!
பொங்கிவரும் துயரத்தை பொடியாக்க வரும் அன்ன
பூரணி கல்யாணி போற்றி!
யோகமுடன் வாழ்வுதரும் பூங்கொடியாம் விசாலாட்சி
புனித உமாதேவி போற்றி!
மங்களங்கள் அத்தனையும் எங்களது வீடுவரை
மாதரசி கூட்டி வருவாய்
வைத்தீஸ்வரன் கோவில் வளர்தையல் நாயகியே!
வளம்காண வைக்கும் உமையே!

மலைபோன்ற செல்வத்தை குவித்து வைத்திருந்து நான்
மற்றவருக்கு உதவ வேண்டும்!
மழலையின் குணத்தோடு முதுமையிலும் இளமையாய்
மகிழ்வோடு வாழவேண்டும்
கலைதவழும் மேடையெல்லாம் பூமாலை அணிந்து
கௌரவம் செய்ய வேண்டும்!
கவிபாடும் எனது குரல்கேட்டவுடன் தெய்வமெல்லாம்
காட்சி தந்து அருள வேண்டும்!
நிலையான புகழ் தந்து உற்றாரும் மற்றாரும்
நேசிக்கும் உறவு வேண்டும்!
நீஎனது துணையாகி, நான் செல்லும் பாதைக்கு
நேர்வழிகள் காட்ட வேண்டும்!
வளையாடும் கரத்தழகி பகைவென்று எந்நாளும்
மறுக்காமல் காக்க வருவாய்!
வைதீஸ்வரன் கோவில் வளர்தையல் நாயகியே!
வளம்காண வைக்கும் உமையே!

சிறுவயதில் உன்பெருமை தெரிந்திருந்தாலுன்னைச்
சேவித்து மகிழ்ந்திருப்பேன்!
தெரியாமல் செய்தபிழை அத்தனையும் மன்னிக்கத்
தேடிவந் தழுதி ருப்பேன்!
புரியாமல் எடுத்தயிப்பிறவிதனில் மங்கையரின்
போகத்தை அளந்திருந்தேன்!
பொன்னோடும் பெண்ணோடும் வருமின்பம் போதுமெனப்
புரியாமல் வாழ்ந்தி ருந்தேன்!
திருநாளில் உன்பெருமை தெரிந்தும் தொடர்ந்து நான்
செவ்வாயில் விரதம் வைத்தேன்!
தித்திக்கும் அருள்தன்னை சித்திக்க வரம்வேண்டி
சிங்கார பாட்டிசைத்தேன்!
பருவத்தில் நான் செய்த பாவத்தை மன்னித்துப்
பாவை நீ காக்க வருவாய்!
வைதீஸ்வரன் கோவில் வளர்தையல் நாயகியே
வளம்காண வைக்கும் உமையே!

திருக்கழு குன்றத்தில் கழுகுக்கும் மதியத்தில்
தினம்தோறும் சோறு உண்டு!
திருநாளாம் பொங்கலில் நந்தியெனும் மாட்டுக்கும்
தித்திக்கும் பொங்கல் உண்டு!
வருஷத்தில் ஒருநாளில் வடையோடு அன்னத்தை
வைரவரும் காண்பதுண்டு!
வளர்கின்ற புற்றுக்குள் ஒளிகின்ற பாம்புக்கும்
வார்க்கின்ற பாலுமுண்டு!
அர்ச்சித்து வழிபட்டு அன்னையே உனையென்னும்
அடியேனுக்கென்ன உண்டு!
அன்று தினம் அளந்தபடி என்றைக்கும் நடந்திடவே
அருள்புரிய வேண்டும் அம்மா!
மரம் வைத்த நீதானே தண்ணீரும் விடவேண்டும்
மறந்திடல் முறையாகுமோ?
வைத்தீஸ்வரன் கோவில் வளர்தையல் நாயகியே!
வளம்காண வைக்கும் உமையே!

கழுதையெனும் பிறவியை எடுத்தாலோ நிச்சயம்
கழுத்திலே பொதி யிருக்கும்
காளைமாடாகவே பிறந்திடின் நிச்சயம்
கழனியில் கால் இருக்கும்?
பழுதான பிறவியாம் நாயாகப் பிறந்தாலோ
பகலிரவு விழிக்க வேண்டும்?
பறவையாய் பிறந்தாலும் மரங்களின் உச்சியில்
பதியங்கள் போட வேண்டும்!
அழுதாலும் தொழுதாலும் அன்னையே உனையன்றி
யாரெனக் குதவு வார்கள்?
ஆறறிவு கொண்டதோர் மனிதனாய் என்னை நீ
அகிலத்தில் படைத்த பின்னால்
வழிகாட்ட மறுப்பதும் நியாயமா? என்விழியில்
வடிந்து நீர் ஒடலாமா?
வைத்தீஸ்வரன் கோவில் வளர்தையல் நாயகியே!
வளம்காண வைக்கும் உமையே!

புல்லாகிப் பூடாகி புழுவாகி இருந்தாலோ
புலம்பியே தீர வேண்டும்!
பொன்னாக அணிகின்ற மனிதனாய்ப் பிறந்த நான்
புதுயுகம் காண வேண்டும்!
கல்லாகி நிற்கின்ற தெய்வம் நீஇல்லையெனக்
காட்டிட விரைந்து வருக
கனதனம் நீதந்து காசினியில் புகழ்தந்து
காவலாய் நின்று அருள்க!
முள்ளாக மலராக மோதிடும் வாழ்க்கையில்
முற்றும் நான் நம்பி வந்தே
மோதகப் பிரியனின் தாயான உன்னிடம்
முறையீடு செய்கின்றேன்!
பல்லக்கு பரிவாரம் பார்த்திடும் ராஜாங்கப்
பவனியை எனக்கு அருள்க!
வைத்தீஸ்வரன் கோவில் வளர்தையல் நாயகியே!
வளம்காண வைக்கும் உமையே!

எவருக்கு எதுவேண்டும் என்பதை அறிந்தநீ
ஏறிட்டுப் பார்க்க வில்லை!
இருகரம் கூப்பியுன் சந்நிதியில் நிற்கும்நான்
எதுகேட்டும் மாறவில்லை!
சிவல்புரியில் வாழ்கின்ற சிங்காரம் தந்ததோர்
செந்தமிழ் கவிதை மூலம்
சீர்கொண்ட பதிகங்கள் பத்தையும் கேட்டுநீ
சிரமத்தை அகற்ற வேண்டும்!
கவலைக்கு மருந்தாகும் கடவுளே உனைநம்பி
காலங்கள் போக்கி விட்டேன்!
காப்பாற்ற வேண்டியது உன் பொறுப் பல்லாது
காசினியில் யார் பொறுப்பு?
மகன் கேட்டு தாய் எதுவும் மறுப்பதில் முறையில்லை
மனமிரங்கி வந்து அருள்க!
வைத்தீஸ்வரன் கோவில் வளர்தையல் நாயகியே!
வளம்காண வைக்கும் உமையே!

*கவிஞர் சிவல்புரி சிங்காரம்*

## ஸ்ரீ நாராயணன் துதி

தூணிலும் இருப்பான் துரும்பிலும் இருப்பான்
தூயவன் ஜோதி நாராயணன் – அவன்
ஆணிலும் இருப்பான் பெண்ணிலும் இருப்பான்
ஆனந்த ஜோதி நாராயணன் (தூணிலும்)

காட்டிலும் இருப்பான் நாட்டிலும் இருப்பான்
காருண்ய மூர்த்தி நாராயணன்
கள்ளத்தனமாய் ஆயர்கள் வீட்டில்
வெண்ணெயை உண்டவன் நாராயணன் (தூணிலும்)

பேச்சிலும் இருப்பான் மூச்சிலும் இருப்பான்
மோகினி ரூபன் நாராயணன்
பார்க்கின்ற பொருள்கள் அனைத்திலும் இருப்பான்
பக்தர்க்கு அருளும் நாராயணன் (தூணிலும்)

பார்த்திபனுக் கொரு நாராயணன்
புல்லாங்குழலோன் நாராயணன்
கர்ணனுக்கும் அதே நாராயணன்
ஸ்ரீ வைகுண்ட நாதன் நாராயணன் (தூணிலும்)

நாராயணா! ஹரி நாராயணா!
நலமே அருள்வாய் நாராயணா!
திருவருள் தருவாய் நாராயணா!
ஊழ்வினை தீர்ப்பாய் நாராயணா!

## திருமால் துதி

ஆதிசேஷா அனந்தசயனா
ஸ்ரீநிவாசா ஸ்ரீ வெங்கடேசா (ஆதி)

வைகுண்டநாதா வைதேகிப்ரியா
ஏழுமலை வாசா எங்களின் நேசா (ஆதி)

வேணுவிலோலனா விஜயகோபாலா
நீலமேக வண்ணா கார்மேக கண்ணா (ஆதி)

காளிங்க நர்த்தனா கமனீய கிருஷ்ணா
கோமள வாயனா குருவாயூரப்பனா (ஆதி)

ஸ்ரீ ராம சந்திர மூர்த்தியைப் பாடு
தீவினை யகலஅவன் திருவடி தேடு (ஆதி)

பாவங்கள் போக்க பஜனைகள் செய்வோம்
பார்த்த சாரதியின் பாதம் பணிவோம் (ஆதி)

திருப்பதி மலையில் திருமுகம் காட்டும்
திருவேங்கடத்தான் திருவருள் பெறுவோம் (ஆதி)

ஸ்ரீ ரெங்கநாதன் பள்ளிகொண்டிருக்கும்
ஸ்ரீ ரெங்கம் சென்று திருவடி பணிவோம் (ஆதி)

## காலபைரவாஷ்டகம்

*வைரவாய வைரவாய வைரவாய மந்திரம்*
*வாழ்வினுக்கு உகந்த நாமம் வைரவாய மந்திரம்*

தேவராஜ ஸேவ்யமான பாவநாங்க்ரிபங்கஜம்
வியாள யக்ஞ சூத்ரமிந்து சேகரம்க்ருபாகரம்
நாராதி யோகி பிருந்த வந்திதம் திகம்பரம்
காசிகாபுராதிநாத காலபைரவம் பஜே.

பாநுகோடி பாஸ்வரம், பவாப்திதாரகம்பரம்
நீலகண்ட, மீப்ஸிதார்த்த, தாயகம் த்ரிலோசனம்
காலகாலமம்புஜா க்ஷமக்ஷ சூலமக்ஷரம்
காசிகாபுராதி நாதகால பைரவம் பஜே.

சூலடங்கபாசதண்டபாணிமாதி காரணம்
ச்யாமகாயம் ஆதிதேவமக்ஷரம் நிராமயம்
பீமவிக்ரம ப்ரபும் விசித்ரதாண்டவ ப்ரியம்
காசிகாபுராதி நாத காலபைரவம் பஜே.

புத்திமுக்தி தாயகம் ப்ரசஸ்த சாருவிக்ரஹம்
பக்தவத்சலம் ஸ்திரம் ஸமஸ்த லோக விக்ஹம்
விநிக்வணன் மறோக்ஞ ஹேமகிங்கிணீலஸத்கடிம்
காசி காபுராதி நாத கால பைரவம் பஜே

தர்மஸே துபாலகம் த்வதர்ம மார்க்க நாசகம்
கர்மபாச மோசகம் ஸிசர்மதாயகம் விபும்
ஸ்வர்ண வர்ண கேசபாச சோமதாங்க நிர்மலம்
காசி காபுராதி நாத கால பைரவம் பஜே

ரத்ன பாதுகா ப்ரபாபிராம பாதயுக்மம்
நித்யமத்விதீய மிஷ்டதை வதம் நிரஞ்சனம்
மிருத்யூ தர்ப்ப நாசனம் கராலதம் ஷ்ட்ர பூஷணம்
காசி காபுராதி நாத கால பைரவம் பஜே

அட்ட ஹாஸ பின்னபத்ம ஜாண்டகோச ஸந்நிதிம்
த்ருஷ்டிபாத நஷ்டபாப ஜாலம் உக்ர சாஸநம்
அஷ்ட்ட சித்தி தாயகம் கபாலமாலிகாதரம்
காசி காபுராதி நாத காலபைரவம் பஜே

பூதஸங்கநாயகம் விசால கீர்த்தி தாயகம்
காசிவாசி லோகபுண்ய பாபசோதகம் விபும்
நீதி மார்க்ககோவிதம்புராதநம் ஜகத்பதிம்
காசிகாபுராதி நாதகால பைரவம் பஜே

கால பைரவாஷ்டகம் படந்தியே மனோகரம்
க்ஞான முக்திஸாதகம் விசித்ர புண்ய வர்த்தனம்
சோக மோஹலோப தைன்ய கோபதாப நாசனம்
தேப்ரயாந்தி காலபைரவாங்க்ரிஸந்நிதிம் த்ருவம்.

## ஸ்வர்ணாகர்ஷண பைரவ அஷ்டகம்

*(ஸ்ரீ துர்க்கைச் சித்தர்)*

ஓம் ஏம் க்லாம் கிலீம் க்லூம் ஹ்ராம் ஹ்ரீம் ஹ்ரூம் சக
வம் ஆப துத்தாரணாய அஜாமல பக்தாய லோகேஸ்வராய
சுவர்ணாகர்ஷண பைரவாய மம தாரித்ரிய வித்வேஷ்ணாய
ஓம் ஸ்ரீம் மஹா பைரவாய நமஹ.

தனந்தரும் வயிரவன் தளிரடி பணிந்திடின்
    தளர்வுகள் தீர்ந்து விடும்
மனந்திறந் தவன்பதம் மலரிட்டு வாழ்த்திடின்
    மகிழ்வுகள் வந்து விடும்
சினந்தவிர்த் தன்னையின் சின்மயப் புன்னகை
    சிந்தையில் ஏற்றவனே
தனக்கிலை யீடு யாருமே என்பான்
    தனமழை பெய்திடுவான்

வாழ்வினில் வளந்தர வையகம் நடந்தான்
    வாரியே வழங்கிடுவான்
தாழ்வுகள் தீர்ந்திட தளர்வுகள் மறைந்திட
    தானென வந்திடுவான்
காழ்ப்புகள் தீர்த்தான் கானகம் நின்றான்
    காவலாய் வந்திடுவான்
தனக்கிலை யீடு யாருமே என்பான்
    தனமழை பெய்திடுவான்

முழு நிலவதனில் முறையொடு பூஜைகள்
　　முடித்திட அருளிடுவான்
உழுதவன் விதைப்பான் உடமைகள் காப்பான்
　　உயர்வுறச் செய்திடுவான்
முழுமலர்த் தாமரை மாலையை ஜெபித்து
　　முடியினில் சூடிடுவான்
தனக்கிலை யீடு யாருமே என்பான்
　　தனமழை பெய்திடுவான்

நான்மறை ஓதுவார் நடுவினில் இருப்பான்
　　நான்முகன் நானென்பான்
தேனினில் பழத்தைச் சேர்த்தவன் ருசிப்பான்
　　தேவைகள் நிறைத்திடுவான்
வான்மழை எனவே வளங்களைப் பொழிவான்
　　வாழ்த்திட வாழ்த்திடுவான்
தனக்கிலை யீடு யாருமே என்பான்
　　தனமழை பெய்திடுவான்

பூதங்கள் யாவும் தனக்குள்ளே வைப்பான்
　　பூரணன் நான் என்பான்
நாதங்கள் ஒலிக்கும் நால்வகை மணிகளை
　　நாணினில் பூட்டிடுவான்
காதங்கள் கடந்து கட்டிடும் மாயம்
　　யாவையும் போக்கிடுவான்
தனக்கிலை யீடு யாருமே என்பான்
　　தனமழை பெய்திடுவான்

பொழில்களில் மணப்பான் பூசைகள் ஏற்பான்
　　பொன்குடம் ஏந்திடுவான்
கழல்களில் தண்டை கைகளில் மணியணி
　　கனகனாய் இருந்திடுவான்
நிழல் தரும் கற்பகம் நினைத்திட பொழிந்திடும்
　　நின்மலன் நானென்பான்
தனக்கிலை யீடு யாருமே என்பான்
　　தனமழை பெய்திடுவான்

சதுர்முகன் ஆணவத் தலையினைக் கொய்தான்
சத்தோடு சித்தானான்
புதரினில் பாம்பைத் தலையினில் வைத்தான்
புண்ணியம் செய்யென்றான்
பதரினைக் குவித்து செம்பினை எரித்தான்
பசும்பொன் இதுவென்றான்
தனக்கிலை யீடு யாருமே என்பான்
தனமழை பெய்திடுவான்

ஜெய ஜெய வடக நாதனே சரணம்
வந்தருள் செய்திடுவாய்
ஜெய ஜெய க்ஷேத்திர பாலகனே சரணம்
ஜெயங்களைத் தந்திடுவாய்
ஜெய ஜெய வயிரவா செகம் புகழ் தேவா
செல்வங்கள் தந்திடுவாய்
தனக்கிலை யீடு யாருமே என்பான்
தனமழை பெய்திடுவான்

## தேவகோட்டை தி.ராம. சாமிவீட்டு குமரையா பதிகம்

காப்பு

தேவகோட்டை நகர்புகழும் தீனா ஐயா
திண்ணப்பர் இராமநாதர் சாமி வீடு
மேவுபுகழ் கொடுமளூரின் குமர வேளும்
வியனருளும் கோவிலதன் புகழைப்பாட
சேவுகனாம் செட்டியானும் பிள்ளை யாரின்
திருவடியிற் தெண்டனிட்டுத் தமிழெ டுத்தேன்
ஆவலுடன் கவிபுனையும் என்ற னுக்கு
ஆனைமுக நாயகனே என்னுங் காப்பு!!

பதிகம்

சீராரும் திருநகராம் தேவ கோட்டை
திண்ணப்பர் இராமநாதர் சாமி வீட்டில்
ஏராரும் உடைமரத்துள் எங்கள் ஐயன்
இனியமுகம் ஈராறின் சுப்ர மண்யம்
ஊராரின் பசியாற்றும் உள்ளங் கொண்டே
ஒப்புடனே பின்கட்டில் அன்ன தானம்
தாராள மாகத்தான் அளிக்கும் எங்கள்
சாமிவீட்டுக் குமரையா போற்றி! போற்றி!!

தேவகோட்டை நைனியப்பர் முருக னுக்குச்
செய்துவைத்த நயமான வைர வேலை
கோவிலுயர் குன்றக்குடி அங்கிருந்து
கொண்டுவந்து சாமிவீட்டில் பூசை செய்து
தேவகோட்டை நகரத்து மாந்தர்க் கெல்லாம்
சிறப்புடனே திருவமுதாம் அன்ன தானம்
தாவுமயில் ஏறிவந்து ஊட்டு கின்ற
சாமிவீட்டுக் குமரையா போற்றி! போற்றி!!

முருகனுக்கு வண்ணமயப் பட்டு டுத்தி
இருவிழிக்கும் எழிலாக மையு மிட்டு
விரியிதழின் மலர்மாலை விதமா யிட்டு
வெண்ணிறும் சந்தனமும் நுதலி லிட்டு
ஒருகிரீடம் முடியேற்றிக் காதி ரண்டில்
உயர்கடுக்கன் இருகாலில் தண்டை பூட்டிச்
சரணமிட்டுப் பணிவாருக்கு அருளை யூட்டும்
சாமிவீட்டுக் குமரையா போற்றி! போற்றி!!

கருவறையில் திருவாச்சி பளப ளக்க
காட்சிதரும் உடைமரமும் அருள்வ டிக்க
முருகனவன் கொடுமளூரில் வீற்றி ருக்கும்
திருவடிவம் காணுகிற விந்தை கிட்டும்
ஒருமனதாய் சாமிவீட்டு மேடை ஏறி
உள்ளுருகிச் சரணமிட்டு வேண்டு கின்ற
தருமணதில் சரளமுடன் அருளைத் தூவும்
சாமிவீட்டுக் குமரையா போற்றி! போற்றி!!

பண்டார வேலவனார் மேனி மின்ன
பாங்குடனே அலங்காரம் செய்து வைத்து
கொண்டாடிப் பக்தரெலாம் கூடி நின்று
கூவிடுவார் அரோகரா முருகா என்று
பண்டாரம் ஏற்றுகிற தீபம் வாங்கிப்
பணிவோடு நம்மையா காட்டும் வேளை
தண்டுன்றும் பழநியப்பன் போல தோன்றும்
சாமிவீட்டுக் குமரையா போற்றி! போற்றி!!

பதினாலு காலிருக்கும் மேடை மேலே
பன்னிரண்டு கண்ணழகன் கோயில் காண
விதிமாறும் நலஞ்சூழும் உண்மை யாமே
வினையாவும் புறமோடும் வெற்றி யாமே
கதிநீயே எனவருவார் கருதும் யாவும்
கணப்போதில் நிறைவேறும்; தந்தைக் கன்று
சதுர்வேதம் தானுரைத்த தேவ கோட்டைச்
சாமிவீட்டுக் குமரையா போற்றி! போற்றி!!

கனியென்றைத் தானன்று விட்ட தாலே
கடுங்கோப முற்றநீயும் சினந்த ணிந்து
இனியநகர் மாந்தரெல்லாம் உண்ணும் வண்ணம்
இசைவோடு வைகாசிப் பூசை ஏற்பாய்
தனவணிகர் தேவகோட்டை நகரில் அன்று
தவறாது படைக்கின்றார் அன்ன தானம்
தனியனாகப் பழநிமலை நின்றி ருக்கும்
சாமிவீட்டுக் குமரையா போற்றி! போற்றி!!
அரசாண்ட தேவரினம் அல்லல் தீர
அசுரனுடல் கீறிவிட்ட செந்தில் வீர!
திருவளரும் பரங்குன்றில் தெய்வ யானை
திருமணமும் தான்கொண்டு பின்னர் மோகக்

குறமகளின் கரம்பற்றக் குன்றி லாடி
இருமனைவி கொண்டருளும் தெய்வ மான
சரசவள்ளி தெய்வயானை நாத னென்னும்
சாமிவீட்டுக் குமரையா போற்றி! போற்றி!!

தொந்திவளர் கணபதியின் தம்பி யாவாய்;
சுகமுடனே வள்ளியம்மை நாத னாவாய்;
தொந்திவளர் கணபதியின் அருளை வேண்டித்
துணையாயகக் குறமகளை மணந்தாய்; நாளும்
எந்தவொரு காரியமும் கனிய வேண்டின்
ஏற்புடனே மூத்தோரைப் பணிக என்னும்
தந்திரத்தைச் சொல்லிவைத்த வேல னான
சாமிவீட்டுக் குமரையா போற்றி! போற்றி!!

கண்மூன்று உடையானின் பிள்ளை யானாய்;
கரிமுகமாய் உடையானின் தம்பி யானாய்;
கண்ணாயிரம் உடையானின் மருக னானாய்;
கரிமலைவாழ் சாஸ்தாவின் அண்ண னானாய்;
கண்ஈராறு உடையானாய்த் தானே யானாய்;
கண்ணீரைத் துடைக்கும் எம் தாயு மானாய்;
சண்முகமாய் சரவணனாய் தோன்று கின்ற
சாமிவீட்டுக் குமரையா போற்றி! போற்றி!!

வாழ்த்து

படைநடத்திச் சமர்வென்ற வேலோய் போற்றி!
பழமெடுக்கப் புவியனைந்த மயிலோய் போற்றி!
கொடைவழங்கும் பன்னிரண்டு கரத்தோய் போற்றி!
குளிர்ந்தனைக்கும் விரிமார்பின் தோளோய் போற்றி
உடைமரத்தின் ஒய்யாரக் குமரா போற்றி!
ஊனுடம்பு இயக்கிவரும் உயிரே போற்றி!
தடையகற்றி அருள்புகட்டுந் தாயே போற்றி!
சாமிவீட்டுக் குமரையா போற்றி! போற்றி!!

வரம்

நிதி சேரும் பொருள்கூடும் எண்ணம் யாவும்
நிறைவேறும் மாடுமனை யாவும் சேரும்
விதிமாறும் துயர்தீரும் அச்சம் நீங்கும்
வெகுதூரம் பகையோடும் வெற்றி கூடும்
விதமான கல்விவரும் தேச மெல்லாம்
வியந்தேத்தும் புகழ்மீறும் உள்ளம் ஒன்றிச்
சதமென்று பணிவாரை நாளுந் தாங்கும்
சாமிவீட்டுக் குமரையா போற்றி! போற்றி!!

## சொல்லு மயிலே - போய் சொல்லுமயிலே

செந்தமிழில் கவியுரைத்தேன்
சின்ன மயிலே – தோகை
மின்னும் மயிலே
கந்தனிடம் கொஞ்சமிதைச்
சொல்லு மயிலே – சென்று
சொல்லு மயிலே

என்னையீன்ற தாயென்றே
எண்ணி இருப்பேன் – உள்ளம்
ஒன்றித் துதிப்பேன்
குன்றமேறிச் சென்றபோதும்
கூவி யழைப்பேன் – என்றன்
பாவில் இழுப்பேன்

ஈசனாரும் அந்தநாளில்
பாசம் மிகுந்து – வெற்றி
மோசம் புரிந்தார்
வேதனையில் கந்தனுமே
வேசம் புனைந்தான் – குன்ற
வாசம் புகுந்தான்

தருமநிலை மாறியவர்
தந்தை எனினும் – வேலன்
சிந்தை சினந்து
துறவுநிலை கொண்டவனும்
ஆண்டி எனவே – கோலம்
பூண்ட பெருமான்

என்னுடைய துன்பமெலாம்
ஏனோ முருகன் – கண்டுங்
காணா திருந்தான்
பன்னிரண்டு கண்ணிருந்தும்
பார்க்க மறந்தான் – எனைக்
காக்க மறந்தான்

வேலவனே சதமென்று
நாளும் நினைந்து – முருகன்
தாளில் பணிந்தேன்
காலமெல்லாம் நம்புமெனைக்
காக்கும் இறையை – மயிலே
தூக்கி வருவாய்.

*அருளிசைமணி. தேவகோட்டை மீயன்னா. சேவுகஞ் செட்டி*

காவடியை சுமந்து வந்தோம் கருணையில்லையா
கந்தா உன் சோதனைக்கோர் அளவுமில்லையா

ஒன்பது கோயில் நகரத்தாரும் ஒன்று சேர்ந்தோமே
அந்த குன்றக்குடி சண்முகத்தின் அருளைப்பெற்றோமே
வேலெடுத்த பண்டாரம் முன்னேபோக
பழநிமலை நோக்கி நாங்கள் பயணப்பட்டோமே (காவடியை)

கம்மாக்கரை வரப்பினிலே தவழ்ந்து வந்தோமே
அங்கு கந்தா கந்தா என்று நாங்கள் கத்திவந்தோமே
சுட்டெரிக்கும் சூரியனும் குறையவில்லையே
கூவி கூவி உனை அழைத்தோம் வரவுமில்லையே (காவடியை)

கொட்டாம்பட்டி ரோட்டினிலே வடையும் மணத்தது
அங்கு கொட்டி வைத்த இளநீரும் பார்த்து சிரித்தது
போதும் போதும் வாழ்வு என்று மனமும் நொந்தது
சிந்தனையில் உன் நினைவே என்னை வென்றது (காவடியை)

ஐயனாரின் குதிரை தேடி கண்கள் அலைந்தது
அந்த கோபாலப்பட்டியுமே ஓடி ஒளிந்தது
மெள்ள மெள்ள உப்பாரும் கண்ணில் பட்டது
வறுத்தெடுத்த சிறு மணலில் பாதம் வெந்தது (காவடியை)

அபிராமி கோவிலுக்கும் வந்து சேர்ந்தோமே
அங்கு அடுத்த கட்டச் சோதைனையை எண்ணி நின்றோமே
ரெட்டியாரு சத்திரமும் தள்ளிப்போனதே
நிலையுமின்றி நினைவுமின்றி மண்ணில் வீழ்ந்தோமே.

வெள்ளி ஊஞ்சல் ஆடவைத்தோம் கட்டிடம் கட்டி
உன்னை அனைவருமே பார்க்குமிடம் செம்மடைப்பட்டி
சோதனைகள் முடிந்த தென்று சிரிக்க முடியுமா
வேலவனே உன் கணக்கை அறிய முடியுமா

குழந்தை வேலன் சந்நிதியின் பெயரைப் பெற்றது
அங்கு கொட்டி கொட்டி கொடுத்த எங்கள் நிலையும் சரிந்தது
மனம் பதற தவிக்க விட்டாய் மறக்க முடியுமா
செல்ல பிள்ளை உன்னை நாங்கள் வெறுக்கமுடியுமா.

உடம்பாலே அடிவாரம் சுற்றிவந்தோமே
ஊன் உறக்கம் இன்றி நாங்கள் நடந்து வந்தோமே
காளை நானும் பாடும் பாடல் கேட்கவில்லையா
இன்னம் கூடி கருணை செய்ய மனமுமில்லையா.

*கோட்டையூர் காளை நாராயணன்.*

## வரவேண்டும் வரவேண்டும்

வரவேண்டும் வரவேண்டும் செந்தில் வடிவேலா – வரம்
தரவேண்டும் தரவேண்டும் செந்தில் வடிவேலா

தாங்கரிய துன்பம் வந்தால் செந்தில் வடிவேலா – நீ
தாயாக வரவேண்டும் செந்தில் வடிவேலா
ஏங்கியழும் போது தேற்ற செந்தில் வடிவேலா – நீ
எந்தையாக வரவேண்டும் செந்தில் வடிவேலா! வரவேண்டும்

வருகின்ற நோயைத் தீர்க்க செந்தில் வடிவேலா – நீ
மருந்தாக வரவேண்டும் செந்தில் வடிவேலா
அருவினையைத் தீர்ப்பதற்கு செந்தில் வடிவேலா – நீ
ஆள்வினையாய் வரவேண்டும் செந்தில் வடிவேலா! வரவேண்டும்

மயங்கு வயதடையும் காலம் செந்தில் வடிவேலா – நீ
மகவாக வரவேண்டும் செந்தில்வடிவேலா
தயங்குநிலை வந்த நேரம் செந்தில்வடிவேலா – நீ
தம்பியாக வரவேண்டும் செந்தில்வடிவேலா! வரவேண்டும்

அவலம் வரும் நேரம் கண்டு செந்தில்வடிவேலா – நீ
அண்ணனாக வரவேண்டும் செந்தில் வடிவேலா
தவழுமுள்ள கருத்தைச் சொல்ல செந்தில் வடிவேலா – நீ
தமிழாக வரவேண்டும் செந்தில் வடிவேலா! வரவேண்டும்

வானம் பார்க்கும் உழவருக்கு செந்தில் வடிவேலா – நீ
மழையாக வரவேண்டும் செந்தில் வடிவேலா
நான் அடையும் தீங்ககல செந்தில் வடிவேலா – நீ
நண்பனாக வரவேண்டும் செந்தில் வடிவேலா! வரவேண்டும்

அறியாமை சூழ்ந்தபோது செந்தில் வடிவேலா – நீ
அறிவாக வரவேண்டும் செந்தில் வடிவேலா
நெறியாவும் முடியும்போது செந்தில் வடிவேலா
நீயேதான் வரவேண்டும் செந்தில் வடிவேலா! வரவேண்டும்

கடலோடி மயங்குவார்க்கும் செந்தில் வடிவேலா – நீ
கலமாக வரவேண்டும் செந்தில் வடிவேலா
உடல்வாடும் ஏழைவாழ செந்தில் வடிவேலா – நீ
உறுதுணையாய் வரண்டும் செந்தில் வடிவேலா! வரவேண்டும்

## அன்னை சக்தி பாலகா

வேல்முருகா வேல்முருகா வேல்முருகா வேல் வேல்
வேல்முருகா வேல்முருகா வேல்முருகா வேல் வேல்

அன்னை சக்தி பாலகா
அழகு மயில் வாகனா
ஆறுதலை தந்திடவே
ஆனந்தமாய் ஆடிவா

ஐங்கரனுக்கிளையவா
ஆறுமுக நாயகா
அனுதினமும் காத்திட
ஆனந்தமாய் ஓடிவா

வட பழனி ஆண்டவா
வள்ளியம்மை நாயகா
வண்ணமயில் ஏறி நீ
வடிவுடனே இங்குவா

தென்பழனி ஆண்டவா
தெய்வயானை நாயகா
தேவர்களை காத்ததுபோல்
எங்களையும் காக்கவா

பார்வதியின் பாலகா
பக்க துணை வருபவா
பக்தர்களை காக்கவே
பரிவுடனே ஆடிவா

பழத்துக்காக போட்டியிட்டு
பழனி மலை சென்றவா
பன்னிருகை வேலனே
பாதுகாக்க இங்கு வா

அப்பனுக்கு பாடம் சொல்ல
சுவாமி மலை அமர்ந்தவா
ஆறுமுகவேலவா அருள் கொடுக்க
இங்கு வா

கவிஎழுத நினைத்தபோது
கவிதந்து காத்தவா
முத்தமிழின் நாயகா எங்களை
முன்னேற்றிகாக்கவா

தேவகோட்டை ராம.சுரேஷ்குமார்

## மேதினியில் ஆதாரம் உந்தனிரு பாதாரம்

காருற்ற தென்பரங் குன்றமதில் விளையாடும்
கருணையா னந்த குருவே
காரணம தானபரி பூரணக்ரு பாகரா
கடல்வண்ண னுக்கு மருகா
கமலத்தில் வந்த அயனைச் சிறையில் வைத்தவா
கமழ்பழநி யம்பதியனே
கயலொத்த விழிமா தெனுங்குறப் பெண்ணுக்குக்
கான்வேங்கை மர மானவா
கதியான பொதிகைவரை தனிலுறையு மிருடிக்குக்
கலையேற்றிய பண்டிதா
கங்காதரன் செவியில் ஓங்காரப் பிரணவம்
கற்பித்த சுவாமி நாதா
கன்னல்வில் லிக்கருமை மைத்துணா சமணரைக்
கழுமுனையில் விட்ட குமரா
கண்ணாயி ரம்பெற்ற அண்டர்கோ னுக்குவரம்
கலிய கற்றிய தெய்வமே!

சீருற்ற நின்மகிமை தெண்டனிட் டடியவர்கள்
செப்புவிண் ணப்ப மதுகேள்
செய்யவினை கொண்டதால் கருவிலுரு வாகியே
சென்மித்து வந்தபின்பு
சிசுவென்று முலையுண்டு பதினாறு வயதினிற்
செந்தமிழ்க் கலைப டித்துச்
செகமீதின் மெய்ஞ்ஞான தெய்வமே யுன்றனைத்
தேடிவந் தேன டுத்தும்
தேனுற்ற தாமரைச் சரவணப் பொய்கைதனில்
தீர்த்தமது தானாடியும்
சிங்கார மாகவளர் கிரியைவல மாய்வந்து
சிந்தையின் துயர மெல்லாம்
செப்பியுங் கேளா திருப்பதேனோ உனது
சிந்தையிலிரக்க மிலையோ
திரமாக வுன்தந்தை மார்க்கண்ட னுக்காகச்
சிரஞ்சீவி கொடுக்க விலையோ!

ஏருற்ற பன்னிரு புயத்தனே தெந்தினம்
        செய்தென்னை யேய்க்கி றாயோ
இதுவென்ன கலியுகக் கொடுமையோ வுனையன்றி
        இன்னுமொரு தெய்வ முண்டோ
ஏதாயி னுஞ்சற் றிரங்காத நெஞ்சமோ
        என்மீதில் என்ன வாதோ
இன்பமிகு கும்பமுலை மங்கைய ரிடந்தனில்
        இணங்கவே வைத்த நினைவால்
ஈராறு காதுக்கு ளேழைநான் சொன்னமொழி
        எள்ளவும் கேட்க விலையோ
எண்டிசையு மண்டபகி ரண்டமு முன்னருள்
        இல்லா மல்நிலை நிற்குமோ
இடையுடை நெகிழ்ந்திடில் இருகைக்கு பசார
        மேவ ராகிலுஞ் சொல்வரோ
ஏழைக்கி ரங்குமுரு கேசனென் றுன்னையே
        இவ்வுலகெலாஞ் சொல்லுதே!

மேருற்ற புயசூரன் மார்பைத் தொளைத்திட்ட
        வேல்தொட் டரண சூரனே
வித்தா கடம்பா அத்திமுக னுக்கிளைய
        வித்தகா சக்தி புதல்வா
வேளைக்கு ளேமகர மீனாக வந்தன்று
        விளையாடி நின்ற பரனே
விந்தையுடனேசைவ மந்திரம் விளங்கவே
        விபூதி யணிசம் பந்தனே
மேதினியில் ஆதாரம் உன்றனிரு பாதாரம்
        மெய்யன்றி வேறில்லையே
வேண்டிய வரந்தந்து தொண்டரைக் காத்தருள
        வேளையிது நல்ல சமயம்
வெள்ளுரை திருப்புகழ் அருணகிரி மகிழவே
        விளையா டுமயில் வாகனா
விங்சமுனி வோர்கள் தொழு மஞ்சேலென்ற ருள்புரியும்
        வேலாயு தக்க டவுளே!

வேல் வேல் வேல் வேல் வேல்முருகா வேல்
வேல் முருகா வேல் முருகா வேல் முருகா வேல்

அன்னை தந்த வேலெடுத்து அசுரர் குலத்தையே
வேரறுத்து வெற்றிகண்ட வெற்றிவேலனே
அன்னை உமை பாலகனே அன்பு தெய்வமே எமை
ஆதரித்து காத்தருள ஆவலுடன் வாவா

அப்பனுக்கு பாடம் சொன்ன சுவாமிநாதனே
ஆவினன் குடியினிலே அமர்ந்த வேலனே
குன்றத்திலே கோவில் கொண்ட குழந்தை வேலவா
எங்கள் குறையெல்லாம் தீர்த்திடவே ஓடோடிவாவா

மாம்பழத்துக்காக அண்ணனுடன் போட்டியிட்டுமே
மயிலேறி பழனி சென்ற பழனி ஆண்டவா
பண்டாரம் உன்னையுமே பாடி மகிழ்கிறோம்
பார்த்து வரம் தந்திடவே பறந்தோடி வாவா

திருப்புகழின் மீதினிலே ஆசை கொண்டவா—திரு
முருகாற்றுப் படையையுமே கேட்டு மகிழ்ந்தவா
சின்னப் பிள்ளை பாடுகிறேன் சிங்காரவேலா
வண்ண மயில் ஏறி நீயும் வாழ்த்திடவே வாவா

சேவல் கொடி கொண்டவனே செந்தில் ஆண்டவா
செந்தமிழைக் கேட்டுவக்க நீயும் இங்குவா
பாரிலுள்ள பக்தர்களைக் காக்க வேண்டியே—பழனி
மலை மீதமர்ந்த பாலனே நீ வாவா

— தேவகோட்டை ராம. சுரேஷ்குமார்.

வேல் வேல் வேல் வேல் வேல்முருகா வேல்
வேல்முருகா வேல்முருகா வேல்முருகா வேல்

பார்வதியாள் பெற்றெடுத்த பாலகுமரனே
கூர்வேலால் அசுரர்களை வென்ற முருகனே
நேர்வழியில் நான் செல்ல துணைவருபவா
சீர்கொடுத்த செந்தமிழே சீக்கிரமே வாவா

அருள் கொடுத்து அரவணைத்து அன்பு காட்டினாய்
அருளாடி ஐயாவின் உருவில் தோன்றினாய்
இருள் சூழ்ந்த வாழ்க்கையிலே ஒளியைக்கூட்டவா
இருபுறமும் மாதிருக்க இன்பமுடன் வாவா

ஆறுமுகவேலவனே அன்பு தெய்வமே
ஆறுகால் சவுக்கையிலே ஆடிவருகவே
ஆறுபடை வீடுகொண்ட அழகு நாயகா
வேறுவினை அணுகிடாமல் வேகமுடன் வாவா

செட்டிமகன் சீலனே உன் அருள் வேண்டியே
எட்டி நடை போடுகின்றோம் செந்தூர்நோக்கியே
கட்டிவரும் காவடியில் காட்சி தருபவா
பட்டினியை போக்கிடவே பறந்தோடி வாவா

துள்ளிவிளையாடுகின்ற குழந்தை வேலவா
அள்ளி அணைக்க ஆறுதாயார் கொண்டபாலகா
வள்ளிதெய்வயானையோடு வலம் வருபவா
புள்ளிமயில் ஏறிநீயும் புறப்பட்டு வாவா

ஊரு சுற்றி திரிந்தலைந்து உன்னிடம் வந்தேன்
பேருபெற்ற செல்வந்தனாய் சிறந்திடச்செய்தாய்
மாறுதலைத் தந்தவனே மலையின் வாசகா
ஆறுதலைத் தந்திடவே ஆனந்தமாய் வாவா

*உ. நந்தி ராமநாதன், தேவகோட்டை.*

**பூஜைக்கு உகந்த விளக்குகள்**

மண்ணால் செய்யப்பட்ட அகல் விளக்கு
வெள்ளி விளக்கு, பஞ்சலோக விளக்குகள்
பூஜைக்கு மிகவும் உகந்ததாகும்.
ஐந்துமுகமுள்ள விளக்குகளையே பூஜைக்கு ஏற்றுவது நல்லது.

## சிங்கார மாலை

ஆனை முகத்தானே ஐங்கரனே உன்னிளையோன்
மானை நிகர்விழியார் மணவாளன் வடிவேலன்
வானை நிகர்கருணை வழங்கும் திறம்பாட
மோனைத் தமிழாகி முன்னவனே காப்பாவாய்!

வானோங்கு தென்பழனி வளர்ந்தோங்கும் மன்னவனே
தேனோங்கு செந்தமிழால் தினமோங்கத் தெண்டனிட்டேன்
மானோங்கு மாதருடன் மயிலேறும் வானவனே
வானோங்கும் செங்கதிரே வருவாய் இதுசமயம்.

கையிற் பழமேந்திக் கருத்தில் உனையேந்தி
மெய்யாக வழிபடுவார் மேலாக்கும் வேலவனே
வெய்யிலுக்கு விரிநிழலே வினைநீக்கும் மாமருந்தே
வையா புரிநாடா வருவாய் இதுசமயம்.

மஞ்சாடும் மலைதோறும் மயிலேறும் வேலவனே
நெஞ்சாடும் கவலை எல்லாம் நீதீர்க்க வேண்டுமையா
தஞ்சமென வந்தவரைத் தாயெனவே ஆதரிக்க
வஞ்சியரின் நாயகமே வருவாய் இதுசமயம்.

காளைத் தவிசோறும் கணணுதலான் கண்மணியே
பாளைச் சிரிப்பழகா பழனிமலை ஆண்டவனே
ஆளை அளக்காமல் அன்பை அளந்துடனே
வஞ்சியரின் நாயகனே வருவாய் இதுசமயம்.

அப்பா எனக்கூவி அழைப்பதுவும் இப்புவியில்
தப்போயான் கூறும் தமிழும் கசப்பதுவோ
ஒப்பாரும் இல்லாத ஓங்கார வேலவனே
சுப்பையா மயிலேறி தோன்றிடுவாய் இதுசமயம்.

முல்லை மலர்போன்ற முத்துச்சிரிப்பழகா
எல்லை வருவோரின் இடர்தீர்க்கும் வேலவனே
கல்லான வன்மனமும் கனியாக்கி வைப்பதிலே
வல்லவனே வடிவேலா வருவாய் இதுசமயம்.

தெள்ளு தமிழுக்கும் தினைப்புனத்தில் கிளிபயிலும்
வள்ளி மயிலுக்கும் வசமாகி விட்டவனே
அள்ளூறிப் பாடிவரும் அடியவரின் மிடிதீர்க்கும்
வள்ளல் மனத்தரசே வருவாய் இதுசமயம்.

வானேறும் கற்புடைய மாதரசி தெய்வானை
கூனேறும் நெற்றிக்கே குழைந்துருகும் வேலவனே
தேனேறும் செந்தமிழால் தெண்டனிடும் மெய்யடியார்
வானேற வைப்பவனே வருவாய் இதுசமயம்.

மங்கை சிவகாமி மைந்தா வார்ந்தொழுகும்
கங்கை வளர்கடையான் கண்மணியே வடிவேலா
அங்கங் குழைந்துருகி அடிபரவும் அன்பெரெனும்
வங்கக் கடல்நடுவே வருவாய் இது சமயம்.

என்ன முருகா எழுந்துவரத் தாமதமேன்
சொன்ன தமிழில் சுவைகுறைவோ சொன்னவனும்
சின்னவனோ வள்ளி திசைமாற்றி விட்டாளோ
மன்னவனே குடிகாக்க வருவாய் இதுசமயம்.

பண்ணொழுகும் செந்தமிழாற் பாடிவரும் உன்னடியார்
கண்ணொழுக நிற்பதையும் கண்டுமனம் இரங்கலையோ
என்னபிழை நானுடையேன் எப்படிநான் கூப்பிடுவேன்
வண்ணமயில் வாகனனே வருவாய் இதுசமயம்.

ஐயா திருக்குமரா அடியேன் கதறுவதும்
பொய்யா நானுரைக்கும் புகழும் இகழாமோ
செய்யான சிந்தையிலே செழித்தோங்கும் தாமரையே
வையா புரிக்கரசே வருவாய் இதுசமயம்.

கந்தா எனக்கதறும் கவிஉனக்குக் கேட்கலையோ
சந்தையிலே நாய்போலத் தமியேன் அலைவதுவோ
சிந்தாமணியே செல்வக்களஞ்சியமே
வந்தருளத் தாமதமேன் வருவாய் இதுசமயம்.

அஞ்சித்தலைகுனிந்தும் அடிமையைபோல்வாய் புதைத்தும்
கெஞ்சி அழைத்தால் கேளாதோ உன்செவிக்கு
வஞ்சியரின் கண்வலையில் மானாகி விட்டாயோ
மஞ்சுலவு மலைநாடா வருவாய் இதுசமயம்.

பாடாத பாட்டெல்லாம் பாடி அழைத்தாலும்
ஆடாதிருப்பதுவோ அருளும் வறண்டதுவோ
வாடா மருக்கொழுந்தே மலைப்பழனி வேலவனே
வாடாஎன அழைத்தேன் வருவாய் இதுசமயம்.

அருள்மிகு சுப்பிரமணியர்,

வேலுடையான்பட்டு, நெய்வேலி



கோவணத்தும் எழில்குலுங்கும் குழந்தை வடிவேலவனே
காவணம்போல் நிழல்கொடுக்கும் கருணைவடி வானவனே
பூவனத்தில் துள்ளிவரும் புள்ளிமயில் வாகனனே
வாய்மணக்கக் கூவுகிறேன் வருவாய் இதுசமயம்.

தீராநோய் தீர்த்தருளும் தென்பழனி மருத்துவனே
கூறாமல் குறைதீர்க்கும் குறிப்பறிந்த மன்னவனே
ஓராறு முகங்காட்டி ஓங்கார உருக்காட்டி
வாரா திருப்பதுவோ வருவாய் இதுசமயம்.

கல்லாப் பிழைகளையும் கற்றவர்கள் கற்றபடி
நில்லாப்பிழைகளையும் நெஞ்சுருகி உன்பெயரைச்
சொல்லாப் பிழைகளையும் சோதிவடி வானவனே
இல்லாப் பிழையாக்க எழுவாய் இதுசமயம்.

எல்லாத்துறையினிலும் ஏமாற்றம் புனைசுருட்டும்
பொல்லாத சூரனைப்போல் புகுந்துவரும் இந்நாளில்
பொல்லாரும் மனந்திருந்திப் புத்தியிலே தெளிவுபெற
வல்லானே வேலெடுத்து வருவாய் இதுசமயம்.

சொல்லாலே மாலையிட்டுத் துணையடியில் தெண்டனிட்டு
நல்லாரும் நாட்டாரும் வழிநெடுக ஓலமிட்டும்
கல்லாய் இருப்பதுவோ கவலைகளைத் தீர்த்தருள
வல்லாய் திருக்குமரா வருவாய் இதுசமயம்.

தங்கநிற வேலவனே தமிழருந்தும் பாலகனே
சிங்கார வடிவேலன் செந்தமிழைக் கேட்டுவைக்க
இங்குவர வேண்டுமென் எல்லோரும் வேண்டுகிறோம்
மங்கையரின் காதலனே வருவாய் இதுசமயம்.

*அர.சிங்காரவடிவேலன்*

## நந்தி

அப்பனை நந்தியை ஆரா அமுதினை
ஒப்பிலி வள்ளலை ஊழி முதல்வனை
எப்பரிசு ஆயினும் ஏத்துமின் ஏத்தினால்
அப்பரிசு ஈசன் அருள் பெறலாமே

*- திருமந்திரம்*

## சிக்கலினைத் தீர்க்குமிடம் சிங்காரமாம் தேசம்!

ஓம் முருகா! ஓம் முருகா! ஓம் முருகா! ஓம்! ஓம்!
ஓம் முருகா! ஓம் முருகா! ஓம் முருகா! ஓம்! ஓம்!

தேவியினை மணந்தஇடம் பரங்கிரியாம் தேசம் – அது
தேவ கைலாசம் – அங்கு
சிறக்குதய்யா மார்பினிலே செவந்திமலர் வாசம்!

கந்தனவன் வென்றஇடம் கடல்பாடும் தேசம் – அது
கருணை கைலாசம் – அங்கு
கமழுதையா மார்பினிலே கடப்பமலர் வாசம் (ஓம் முருகா)

பழத்துக்காக போட்டியிட்டது பழநிமலை தேசம் – அது
பக்த கைலாசம் – அங்கு
பகட்டுதையா மார்பினிலே பாரிஜாத வாசம்

ஆசானாய் வந்தஇடம் சுவாமிமலை தேசம் – அது
அறிவுக் கைலாசம் – அங்கு
அடிக்குதையா மார்பினிலே அல்லி மலர் வாசம் (ஓம் முருகா)

சூரனைத்தான் வென்றஇடம் செந்தூரம் தேசம் – அது
சிறந்த கைலாசம் – அங்கு
சுப்பையா மேனியிலே சுகந்தமலர் வாசம்!

சினம் கொஞ்சம் தணிந்த இடம்
திருத்தணிக்கை தேசம் – அது
சேர்ந்த கைலாசம் – அங்கு
செந்திலவன் மார்பினிலே செவந்திமலர் வாசம்! (ஓம் முருகா)

சிக்கலினைத் தீர்க்குமிடம் சிங்காரமாம் தேசம் – அது
சிறந்த கைலாசம் – அங்கு
சிரிப்பவனின் மார்பினிலே செவந்திமலர் வாசம்!

ஏறுமுகம் காட்டுதம்மா ஆறுமுகன் தேசம் – அது
அரிய கைலாசம் – அங்கு
அமர்ந்தவனின் மேனியிலே அல்லிமலர் வாசம்! (ஓம் முருகா)

குன்று தோராடுவது குமரனது தேசம்
அது கோடி கைலாசம் – அங்கு
கொஞ்சுதையா மார்பினிலே குறிஞ்சி மலர் வாசம்

*கவிஞர் சிவல்புரி சிங்காரம்*

## ஸ்ரீ பழனியாண்டவர் திருப்பதிகம்

(பகை கடிதல்)

மோதகம் நிவேதனம்; மூஷிகம்உன் வாகனம்;
முறங்கள்போல் செவித்தலம்; வரம்கொடுக்கும் ஐங்கரம்;
போதகம்; கஜானனம்; புராணஞான வாரணம்;
போற்றிபோற்றி உன்பதம் – காக்கவேண்டும் என்குலம்!

வேல்பிடித்தகை யிலேசெங் கோல்பிடித்து நின்றவா!
வேண்டிவந்த யாவையும் விரைந்தளிக்கும் மன்னவா!
கால்பிடித்தேன்; என்மனக் கலக்கம்நான் உரைக்கவா?
கண்திறக்க வேண்டும்வேண்டும் தென்பழநி ஆண்டவா!

எனதுபக்கம் நீயிருக்க எங்கிருந்து பகைவரும்?
யானிருந்த மனைநடுங்க எவ்விதம் துயர்வரும்?
மனதுநொந்து நொந்துவந்த மைந்தனைநீ தாங்கவா–
வாழிவாழி தென்பழநிக் கோவில்கொண்ட ஆண்டவா!

ஆதிநாளில் சூரனை அழித்ததெய்வம் நியெனில்–
அடுத்துவந்த பகையெல்லாம் முடித்ததுண்மை தான்எனில்–
மோதிநிற்கும் என்பகை முடிக்கவேல் எடுத்துவா–
முருகனேதென் பழநிகொண்ட அழகனே என் ஆண்டவா!

பன்னிரண்டு கைத்தலத்தில் பளபளக்கும் ஆயுதம்!
பாய்ந்துசெல்லத் துடிதுடிக்கும் பச்சைமயில் வாகனம்!
இன்னல்செய்யும் பகைமுடிக்க இன்னும்என்ன தாமதம்?
என்னையாளும் மன்னனான தென்பழனி ஆண்டவா!

ஈசனேஉன் மனைவிபேரும் தேவசேனை என்கிறார்!!
இன்னொருத்தி விழியிரண்டும் ஈட்டியென்று சொல்கிறார்!
வாசம்செய்யும் இடமெலாமும் பாசறைகள் அல்லவா?
மைந்தனே என் பகைமுடிப்பாய் தென்பழநி ஆண்டவா!

எம்பிரானே ஒன்பதுபேர் தம்பிமாரை நம்பினேன்
எனது காவல் இவர்கள் என்று கவிதைபாடிச் சொல்கிறேன்
நம்பினாரைக் காக்கவேறு நாதன் ஏது சண்முகா?
நவிலொணாப் பகைமுடிப்பாய் பழநிமலை ஆண்டவா

ஆறுபடை வீடிருக்க வேறுபடை ஏனடா?
அழிக்கொணாத கோட்டை நின் சடக்கரங்கள் தாமடா
மாறிலாத கவசமாய் வரும் சுழன்று வேலடா
வல்வினை பகைமுடிப்பாய் தென்பழனி ஆண்டவா!

ஆரவார மாய் எழும் அகப்பகை புறப்பகை
அறியொணாத மந்த்ரயந்தர தந்த்ரமாய் வரும்பகை
வேர்விடும் குலப்பகை வினைப்பகை கிரகப்பகை
வேறுபல் பகைமுடிப்பாய் வேல்பழனி ஆண்டவா

எந்தவேளை யானபோதும் கந்தவேளை பாடுவேன்
இந்தவேளை உன்னையன்றி எந்தஆளை நாடுவேன்
வந்த வேளை நல்லவேளை வாகைகொண்ட வேலவா
வன்பகை ஒழித்தருள்வாய் தென்பழநி ஆண்டவா

அப்பனே அடைக்கலம் என் ஐயனே அடைக்கலம்
அமரர்கோன் பகைமுடித்த அண்ணலே அடைக்கலம்
எய்ப்பிலே சரண் புகுந்தேன் ஈசனே அடைக்கலம்
என்பகை முடித்தருள்வாய் தென்பழனி ஆண்டவா

**கந்த வடிவேலன்**

சுட்டதிரு நீறெடுத்து தொட்டகையில் வேலெடுத்து
தோகைமையில் மீதமர்ந்த சுந்தரம் – அந்தக்
கட்டழகு கொண்டதொரு கந்தவடி வேலனைச்
சாற்றுவது ஆறெழுத்து மந்திரம்! (சுட்ட)

ஆறெழுத்து மந்திரத்தைத் தந்ததொரு சுந்தரத்தை
அந்திபகல் சிந்தனைசெய் நெஞ்சமே – அந்த
ஆறெழுத்து மந்திரத்தை யாரெடுத்து ஓதினாலும்
ஆறுமுகம் வந்துநிற்கும் முன்னமே! (சுட்ட)

கந்தனடியே நினைந்து சங்கத்தமிழ் மாலைகொண்டு
வந்தனை செய்வோர்கள்மனம் ஆறுமே – பரங்
குன்றுவளர் குகனோடு தங்கிவரவே நமக்குள்
பொங்கி வரும்செல்வம் பதினாறுமே! (சுட்ட)

திருமதி. சௌந்தரா கைலாசம்

**சிந்திப்பதற்கு சில விஷயங்கள்**

பொறுத்திருப்பதன் மூலம் எந்தக் காரியத்தையும் சாதித்துவிடலாம்.
தண்ணீரை ஒரு சல்லடையில் கூட எடுத்துச்செல்லமுடியும்.
அதுஉறையும் வரை பொறுத்திருப்போமேயானால்.
யோசிப்பதானால் நிதானமாக யோசியுங்கள்.
செயல்படுவதானால் உறுதியோடு செயல்படுங்கள்.
விட்டுக்கொடுப்பதானால் பெருந்தன்மையோடு விட்டுக்கொடுங்கள்.

## பழமுதிர் சோலைப் பதிகம்

கொஞ்சு தமிழ்ப் பாமழைக்கும் நெஞ்சமெனும் பூமழைக்கும்
கோலமயில் ஏறிவரும் வேலவன் – அந்த
பிஞ்சுமன வேலவனைச் சஞ்சலந்தீர் மூலவனைப்
பேசுவது ஆறெழுத்து மந்திரம்!

வெள்ளமெனப் பாடிவரும் வேலவனை நாடிவரும்
வெற்றிமிகு மாந்தரது கூட்டமே – தினம்
கள்ளமிலா உள்ளமெலாம் மெல்லமெல்ல ஓடிவரக்
கால்நடையில் புள்ளிமயில் ஆட்டமே!

சாலையிலே தூங்குவதும் காலையிலே தாங்குவதும்
சண்முகனுக்கு கேற்றதொரு காவடி – நம்
வேலையெல்லாம் விட்டுவிட்டுக் காலைபகல் மாலையெலாம்
வீரநடை போடுவதும் சேவடி!

பள்ளயங்கள் போடுவதும் பந்தயமாய் ஓடுவதும்
பாலனுக்குப் போட்டதொரு பாலமே – தினம்
துள்ளிவரும் வேலெடுத்துப் புள்ளிமயில் வாகனுக்குத்
தோல்உரியக் கால்நடக்கும் சீலமே!

தங்குவதும் தூங்குவதும் தாளெடுத்துப் போடுவதும்
தந்திணத்தாம் போடுகின்ற தாளமே – தினம்
சங்குமுகம் பாடுவதும் சிங்கமுகன் ஓடுவதும்
சண்முகனுக் கேற்றதொரு மேளமே!

ஆண்டியென உள்ளவனும் தூண்டிலிலே வந்திடுவான்
ஆறுமுக சாமியினைப் பாடு – அவன்
கண்டிகதிர் காமமுடன் அண்டியவர் உள்ளமெலாம்
காத்திருப்பான் ஆறுபடை வீடு!

சாமிமலை பழநிமலை சார்ந்ததொரு தணிகைமலை
சண்முக விலாச மெனக்கூறு – இந்தப்
பூமியிலே உள்ளவர்கள் சாமியெனப் போற்றிநிதம்
பூசுவதும் ஆறுமுகன் நீறு!

பாரிவளம் மீறிவரப் பக்தரெல்லாம் ஏறிவரப்
பழமுதிரும் சோலையைநீ பாடு – தினம்
ஊறிவரும் பக்தியிலே ஏறிவரும் சக்தியினால்
உயர்அழகர் மலையினையே நாடு!

காசி ஸ்ரீ அரு.சோமசுந்தரம்,

## ஒயிலாட்டம்

கந்தனுக்கும் வேல் வேல்
முருகனுக்கும் வேல் வேல்

பச்சை மயில் வானம்
பச்சை வள்ளி மோகனம்
கச்சை கட்டி ஆடுங்கடி ஒயிலாட்டம்
கால்மாறி ஆடுங்கடி மயிலாட்டம் (கந்தனுக்கும்)

தேவயானை கண்ணரசி
தேவேந்திரன் பெண்ணரசி
பூ மகளின் மருமகளே ஒயிலாட்டம்
புண்ணியத் தவசீலன் மயிலாட்டம் (கந்தனுக்கும்)

பச்சமலை பவளமலை
இச்சை மலை பழநிமலை
இன்பநிலை எமது நிலை ஒயிலாட்டம்
ஏகபோக தரிசனமாம் மயிலாட்டம் (கந்தனுக்கும்)

தங்கப்புள்ளி அங்கமது
தாவித் தாவி ஆடுமது
எங்களது முருகனுக்கு ஒயிலாட்டம்
எல்லையற்ற பேரழகே மயிலாட்டம் (கந்தனுக்கும்)

கொண்டை குலுங்குதடி
கூவியே ஆடுதடி
மண்டலமே மயங்குதடி ஒயிலாட்டம்
மாயவனும் மயங்குகிற மயிலாட்டம் (கந்தனுக்கும்)

முத்துநகை மோகநகை
பித்துநகை பெரியநகை
சித்துகளாம் செந்திலவன் ஒயிலாட்டம்
சிங்கார வேலனுக்கு மயிலாட்டம் (கந்தனுக்கும்)

இயற்றியவர் நாச்சியப்பன்

## ஆடுக ஊஞ்சல் ஆடுகவே

ஆடுக ஊஞ்சல் ஆடுகவே
அய்யா முருகா ஆடுகவே
ஆடுக ஊஞ்சல் ஆடுகவே
அய்யா முருகா ஆடுகவே! —ஆடுக

ஆழிப் படுக்கை கொண்டோனின்
அருமை மருகா ஆடுகவே
ஊழி தாண்டி நிற்பானின்
உத்தமச் செல்வா ஆடுகவே! —ஆடுக

வாழும் மனிதர் யாவருக்கும்
வழிக்குத் துணையாம் வேலவனே
ஆளும் கவலை ஓடிடவே
ஆடுக ஊஞ்சல் ஆடுகவே! —ஆடுக

ஆடகப் பொன்னால் ஊஞ்சலிட்டு
அதற்கு வயிரக் கயிறுமிட்டு
கூடிடும் அடியார் ஆட்டிடவே
குமரா ஊஞ்சல் ஆடுகவே! —ஆடுக

பாடுகள் குறைந்தே மாந்தரெலாம்
பண்பாய் வாழ்ந்து உயர்ந்திடவே
வாடிடும் பயிர்கள் வளம் பெறவே
ஆடுக ஊஞ்சல் ஆடுகவே! —ஆடுக

முன்னே பின்னே சென்றாலும்
முளையில் ஒன்றி நின்றிடுமே
என்னே வாழ்க்கை என்றாலும்
எல்லாம் உன்னைச் சுற்றியதே —ஆடுக

குன்றக் குடியாய் எமைகாக்கும்
குன்றக் குடியில் வேலவனே
கண்ணே மணியே கதிர்வேலா
கவினார் ஊஞ்சல் ஆடுகவே! —ஆடுக

விண்ணவர் செல்வி தெய்வானை
வேடவர் மகளாம் வள்ளியுடன்
மண்ணகம் சுற்றும் மயிலேறி
மேதகு சேவற் கொடியாட! —ஆடுக

கொண்டிடுங் காதல் உணர்வோடு
  கனிந்த நெஞ்சத் தூஞ்சலிலே
அன்புடன் ஏறி இனிதமர்ந்தே
  ஆடுக ஊஞ்சல் ஆடுகவே! —ஆடுக

மண்ணைப் பிளந்து பெரும்பேட்டில்
  மாபெரும் அருளுடை வடிவுடனே
பெண்ணின் நல்லார் இருவருடன்
  பெருமயில் ஏறிவந்தவனே! —ஆடுக

கண்ணே தெரியாக் காட்டிடையே
  கலங்கித் தவிக்கும் எங்களுக்கே
உன்னால் வழியும் தெரிந்துயர
  ஆடுக ஊஞ்சல் ஆடுகவே! —ஆடுக

ஆறடி நெடிதாம் உருவுடனே
  அடியார் பக்தி உருவேற
பேரருள் கொண்டாய் பெரும்பேடா
  பிள்ளைகள் நலிவினைப் போக்கிடவே! —ஆடுக

சீரடி வணங்கிட வந்துள்ளோம்
  செல்வா அருளைத் தந்திடுவாய்
ஆரிருள் விலகி ஒளிபெறவே
  ஆடுக ஊஞ்சல் ஆடுகவே! —ஆடுக

*-மெ.மெய்யப்பன், காரைக்குடி.*

## கந்தன் தாலாட்டு

ஆராரோ ஆரிரரோ ஆராரோ ஆரிரரோ
ஆராரோ ஆரிரரோ ஆராரோ ஆரிரரோ

தாயரசி பார்வதியாள் தரவில்லை பாலென்று
தங்கமகன் அழலாமோ சண்முகனே கண்ணுறங்கு (ஆராரோ)

ஒய்யாரப் பாற்குடங்கள் ஒருகோடி தானெடுத்து
மெய்யன்பர் வருவார்கள் மீன்விழியே கண்ணுறங்கு (ஆராரோ)

ஆடிவிளை யாடுதற்கு அழகுப் பொருளில்லையென்று
அழலாமோ வேலவனே ஆறமுதே கண்ணுறங்கு (ஆராரோ)

ஆயிரமாம் காவடிகள் ஆடிவரும் கூடிவரும்
ஆனந்தமாய் ஆடிடலாம் அழகமுதே கண்ணுறங்கு (ஆராரோ)

மாம்பழத்தை அண்ணனுக்கு மாயவனும் தந்ததனால்
மயிலேறி வலம் வந்தவனே முருகா நீ கண்ணுறங்கு (ஆராரோ)

தேன்கொட்டும் அபிஷேகம் செங்கதலிப் பழச்சாறு
சேர்ந்துநிதம் குளித்திடலாம் செவ்வேளே கண்ணுறங்கு (ஆராரோ)

கொஞ்சிவிளை யாடுதற்கு மஞ்சள்முக மில்லையென்று
கோமகனே அழலாமோ குமரவேலே கண்ணுறங்கு (ஆராரோ)

வஞ்சிக்கொடி வள்ளியம்மை வாஞ்சைக்கிளி தெய்வயானை
வந்திடுவார் கொஞ்சிடுவார் வடிவேலா கண்ணுறங்கு (ஆராரோ)

ஏறுமயில் ஏறுதற்கும் எங்கும் விளையாடுதற்கும்
ஏங்கியேநீ அழலாமோ எழிலரசே கண்ணுறங்கு (ஆராரோ)

ஆறுபடை வீடிருக்கு அழகுமயில் நூறிருக்கு
ஆடிடலாம் பாடிடலாம் ஆறுமுகா கண்ணுறங்கு (ஆராரோ)

*-கவிஞர் குறள் இலக்குவன்*

### இறைவனுக்கு உகந்த எண்ணெய்கள்

| | | |
|---|---|---|
| மகாலெக்ஷ்மி | – | நெய் |
| நாராயணன் | – | நல்லெண்ணெய் |
| விநாயகருக்கு | – | தேங்காய் எண்ணெய் |
| ருத்திரபதி தேவதைகள் | – | இலுப்பை எண்ணெய் |
| தேவி அம்மனுக்கு | – | ஐந்து வகை எண்ணெய் |
| எல்லா தேவதைகளுக்கும் | – | நல்லெண்ணெய் |

## மயிலே மயிலே நீ ஆடு

மயிலே மயிலே நீ ஆடு–எங்கள்
மன்னவன் புகழை நீ பாடு
மயிலே மயிலே நீ ஆடு–எங்கள்
மன்னவன் புகழை நீ பாடு

மயிலே மயிலே நின்றாடு
மன்னவன் முருகனை மன்றாடு
தென்னவன் மகிழ்ந்திட நீ ஆடு
சேவற்கொடியுடன் சேர்ந்தாடு (மயிலே)

செந்தமிழ் கீதம் நான் பாட
சந்தன காவடி தானாட
இந்திரன் கொலுவில் மீனாட
தந்தன தாளங்கள் சேர்ந்தாட (மயிலே)

கல்லும் மரமும் கனிந்தாட
காவிரி வெள்ளம் புரண்டோட
உள்ளும் புறமும் ஒன்றாக
புள்ளி மயிலே நின்றாடு (மயிலே)

தும்புரு நாரதர் வந்தாட
துவாரகை கண்ணன் குழலூத
பண்பாய் வேலவன் கலந்தாட
படை வீடாறிலும் நின்றாடு (மயிலே)

தங்கச் சரப்பளி பூண்டவனை
தணிகை மாமலை ஆண்டவனை
திங்களை அணிந்தோன் திருமகனை
தினமும் போற்றி நின்றாடு (மயிலே)

கலைமகள் நாவில் கலந்தாட
நிலமகள் தரையில் மகிழ்ந்தாட
அலைமகள் அச்சுத னுடனாட
மலைமகள் மடியில் நின்றாடு (மயிலே)

சரவணப் பொய்கையில் நானாட
சண்முக நதியினில் அவனாட
வையாபுரியில் நீயாட
வருவான் சரவணன் விளையாட (மயிலே)

குயில்கள் பாடும் குரலோசை
கோகுல கிருஷ்ணன் குழலோசை
பஜனை பாடும் பண்ஓசை
பழநிக் கோயில் மணியோசை (மயிலே)

பாடலைப் படித்தால் பலனுண்டு
படிப்பதைக் கேட்டால் நலமுண்டு
தினமும் படித்தால் செல்வமுண்டு
பழநி முருகன் அருளுண்டு

*எஸ்.இராஜலெட்சுமி அரிமளம்*

## மயில் வந்து ஆடுது

"ஆஹா வேல் வேல் வேல் வெற்றி
வேல் வேல் வேல்" –கோரஸ்

மயில் வந்து ஆடுது மலை மேலே
குயில் வந்து பாடுது சிலை போலே
வேல் வந்து மின்னுது கண்ணெதிரே
வேலனைக் காணேனோ என்னெதிரே! **(வேல்)**

திருப்புகழ் பாடியே கைதொழுதேன்
கருப்புகழ் நீங்கிட மெய்தொழுதேன்
விருப்புடன் வேண்டியே பாடுகிறேன்
விராலிமலை நோக்கி ஓடுகிறேன்! **(வேல்)**

சோலையில் வந்தால் குறைதீரும்–அந்தச்
சுந்தரப் புன்னகை நிறைவாகும்
மாலையில் மயங்கியே வாடுகிறேன்
மையலில் உன்னையே தேடுகிறேன்! **(வேல்)**

வள்ளிக்கு வாய்த்த வடிவழகா
அள்ளிட ஆவியே துடிக்குதப்பா!
சொல்லிச் சொல்லி என்னபயன்?–வந்து
நில்லு நில்லு என் கண்ணெதிரே! **(வேல்)**

## நல்லதமிழ்ச் சொல்லெடுத்து

முருகா முருகா வேல்முருகா
முருகா முருகா வேல்முருகா

நல்லதமிழ்ச் சொல்லெடுத்து நாளும் பாடு
நம்தலைவன் முருகனையே நாடி ஓடு
வல்லகதிர் வேலவனும் வள்ளி யோடு
வந்துநலந் தந்தருள்வான் வாகை யோடு (முருகா)

அஞ்சுவகைக் கனியெடுத்து அமுது செய்வோம்
ஆறுமுகன் மேனியிலே தொழுது பெய்வோம்
கொஞ்சுமெழில் குமரனுக்குப் பூக்கள் கொய்வோம்
கூறுதமிழ்ச் சொல்லெடுத்துப் பாக்கள் நெய்வோம் (முருகா)

தண்ணாரும் பழநிமலை நடந்து செல்வோம்
சாலைவழித் துன்பமெல்லாங் கடந்து செல்வோம்
கண்ணான முருகனையே கொஞ்சி மகிழ்வோம்
கருணைமழை பொழிகவெனக் கெஞ்சிக் கேட்போம் (முருகா)

கல்லழுத்தித் தாரரித்துத் தோலுந் தேயும்
காலிரண்டும் கொப்பளித்துக் கன்றிப் போகும்
வெல்லமெனும் கந்தனவன் பேரைக் கூவ
வேதனைகள் தீர்ந்துநடை வேகங் கூடும் (முருகா)

கந்தனையே சொந்தமென எண்ணும்போது
கவலையெனுங் கடலதுவும் வற்றிப் போகும்
சிந்தனையில் தெளிவுவரும் செல்வம் சேரும்
செருமுனையில் பகையழிந்து வெற்றி சேரும் (முருகா)

அண்ணனுக்கும் யானையென மாறுதலை
அப்பனுக்கும் கங்கையெனு மாறுதலை
சண்முகனாம் கந்தனுக்கு ஆறுதலை
தந்தருள்வான் எந்தனுக்கும் ஆறுதலை (முருகா)

*தேவகோட்டை மீ.சேவுகன் செட்டி*

## ஒன்றுமில்லை என்று நினைத்தேன்!

முருகா! முருகா! வேல் முருகா!
முருகா! முருகா! வேல் முருகா!

கல்லுக்குள்ளே ஒன்றுமில்லை எனவிருந்தேன்
உள்ளுக்குள்ளே தேரை என்று கண்டுவியந்தேன்
அங்கும் உண்டு ஈரம் என்று இன்று உணர்ந்தேன்
அன்பிருந்தால் எங்கும் உண்டு என்று தெரிந்தேன் —முருகா

இல்லை, இல்லை, இல்லை என்று அன்று பகன்றேன்
எல்லாம் கல்லு செம்பு என்று சொல்லி இகழ்ந்தேன்
வெண்ணெய் பாலுக்குள்ளே என்று கண்டு வியந்தேன்
வேலா! உன்னைக் காணும் வழி இன்று அறிந்தேன் —முருகா

எங்கே எங்கே என்று கேட்டுத் திரிந்தேன்
இல்லா இடம் எங்கும் சென்று தேடி அலைந்தேன்
அங்கும் இங்கும் எங்கும் உள்ள உண்மை அறிந்தேன்
இங்கே உன்னை கண்டு போற்ற எண்ணி நடந்தேன் —முருகா

ஆண்டு தோறும் கார்த்திகையில் மாலை அணிந்தேன்
ஆறுமுகம் உன்னை எண்ணிப்பாடி மகிழ்ந்தேன்
வேண்டி வரும் அன்பருடன் கூடி நடந்தேன்
வெய்யில் பனிஎண்ணவில்லை தாங்கித்தொடர்ந்தேன் —முருகா

நெஞ்சுறுதியை அளக்க நீ நினைத்தாயோ
நேற்றுவரை சோதித்து நீ முடித்தாயோ
தஞ்சமென்று வந்த பின்பும் தவிக்க விட்டாய்
சன்னதியின் முன்பு நின்றும் புலம்ப விட்டாய் —முருகா

சோதனையை பேதை மனம் உணரவில்லை
துன்பத்தையே கண்ட உள்ளம் பொறுக்கவில்லை
நீ துணை என்றே நடந்தும் உறுதியில்லை
நெஞ்சம் தளர்ந்தேன் நிலைமை அறியவில்லை —முருகா

படிப்படியாக என்னை உயர்த்திவிட்டாய்
பையப்பையவே இருளை அகற்றி விட்டாய்
வெடிக்கசையாத கல்லு மனதை எல்லாம்
வெயில்பட்ட நெய் யெனவே உருக வைத்தாய் —முருகா

பகல் கனவைக்கூடப் பலிக்க வைத்தாய்
பட்ட மரமும் தழைத்து செழிக்க வைத்தாய்
அகல் விளக்காய் இருந்த என்னை எடுத்தாய்
அண்ணாமலை விளக்காய் திகழ விட்டாய் -முருகா

நினைத்ததை எல்லாமே நடத்தி வைத்தாய்
நீண்டதுன்பம் தொடர்கதை முடிய வைத்தாய்
இனையடித் தாமரையில் விழுந்து விட்டேன்
இன்று உன்னை ஏதோ கொஞ்சம் உணர்ந்துவிட்டேன் -முருகா

உந்தனருள் இன்னதென்று உணர்த்தி விட்டாய்
உள்ளத்துக்குள் கோவில் ஒன்று அமைக்க வைத்தாய்
சுந்தர வேலோடு அங்கே எழுந்தருள்வாய்
தோகை மயில் வாகனனே சரணம் கந்தா -முருகா

## சக்தியின் மைந்தன்

சக்தியின் மைந்தனாய்ச் சரவணையில் தோன்றினாய்
சங்கடத்தைத் தீர்த்தருளச் சண்முகனாய் மாறினாய்
ஆனைமுகன் தம்பியாய் அவனியிலே தோன்றினாய்
ஆறெழுத்து மந்திரத்தை அன்பர்க்கே ஊட்டினாய்,

பழநிமலை ஏறிவந்து ஆண்டியாக மாறினாய்
பக்தர்குறை தீர்த்தருளப் பண்டாரமாய் ஆகினாய்
செட்டிமகன் சீலனாய்ச் சிக்கலிலே தோன்றினாய்
செழுமையோடு வாழவைக்கச் சிங்காரமாய் மாறினாய்

கோலமயில் ஏறிவந்து குருபரனாய்த் தோன்றினாய்
கொடுமைகளைத் தீர்த்தருளக் குமரனாக மாறினாய்
ஈராறு கையனாய் வையகத்தில் தோன்றினாய்
இனியவடி வேலவனாய் இல்லத்தில் தோன்றினாய்

அழகுமயில் ஏறிவரும் பழனிமலை ஆண்டவா
அன்பர்க்கு அருள் கொடுக்கும் பழநிமலை ஆண்டவா
முத்தையா வேண்டுகிறேன் பழநிமலை ஆண்டவா
முக்திவழி காட்டவேண்டும் பழநிமலை ஆண்டவா

(தேவகோட்டை-மு.மா. அசோக்குமார்)



8

## பூசம் வந்தது

பூசம் வந்தது பூசம் விபூதி சந்தன வாசம்
தேசமெங்கும் முருகனுக்கு திருவிழா உல்லாசம்

திருப்பரங்கிரி அழகன் அவன் திருச்செந்தூர் மறவன்
விருப்பமுடன் பழனி வந்த வேலேந்திய அழகன்

ஆடி வரும் வேலன் அவன் அன்னை சக்தி பாலன்
நாடி வரும் செல்வமெல்லாம் நல்கும் அனுகூலன்

மந்திர உபதேசி சுவாமி மலையின் பிரம்மச்சாரி
சுந்தரமாய் உலவிவரும் சோலைமலை வாசி

தாருகனை அழித்து சிங்கன் தலையை எட்டி மிதித்து
சூரர் கூலம் வேரறுத்தான் துள்ளும் வேலை விடுத்து

வாகை கொண்டவேலை தினம் வணங்குவதே வேலை
தோகை மயில் வேல் நமக்கு சூடும் வெற்றி மாலை

போனதெல்லாம் போக இனி புதிய பிறவியாக
வானும் மண்ணும் வசப்படுமே மயிலும் வேலும் ஆட

## வேலாட மயிலாட

வேலாட மயிலாட வேலாட மயிலாட
வினை போக்கி எமையாள வருக
விதி மாற்றி புதுவாழ்வு தருக

சிறியேனும் உன்பிள்ளை உன்வீட்டின் கொடிமுல்லை
அடியேனுக்கருள் காட்சி தருக – முருகா
அயில் வேலும் மயிலோடும் வருக

விடிகாலை ஜபவேளை வடிவேலைத்தொழும் வேளை
மடிநீக்கி மனதாள வருக–முருகா
மயிலோடும் வேலோடும் வருக

உலகாளும் தலைவா நீ உனதாட்சி தனிமாட்சி
தேவானை குறமாதும் கூட–முருகா
திருக்காட்சி தரவேணும் பாட

திருசெந்தூர் பரங்குன்றம் தென்பழநி சோலைமலை
திருத்தணிகை சுவாமி மலை குருவே–முருகா
செவ்வேளே சிங் கார உருவே

மங் காத ஒளி வீசும் மதிபோலும் முகமானாய்
எங் கேனும் நின் போன்ற காட்சி–முருகா
இனிமேலும் அமையாதே மாட்சி

இடரேதும் வாராது எனநீயும் கூறாது
இனிமேலும் விடமாட்டேன் உனையே–முருகா
இனி நானும் போவதெங்கே தனியே .

*சவ்வாது புலவர் இயற்றிய*

## கொடுமளூர் முருகன் பதிகம்

பூமேவுசண்முக விலாசமும் ஈராறு
புருவமும் கிரீடமுடியும்
பொட்டுநுதலும்கனக குண்டலமும் அருண்மாரி
பொழியும் ஈராறு விழியும்
மாமேவு செம்பவள வாய்மந்த காசமும்
மாலையணி யும்கழுத்தும்
வாகுகேயூரமும் ஈராறுபுய மும்கையும்
வடிவேலும் அபயகரமும்
தாமேவு மெஞ்ஞோப வீதமணி மார்பமும்
சாத்துதிரு வுத்தரியமும்
தாமரைப் பாதமும் தமியனேன் காணப்பர
சன்னமாய்க் காட்சிதருவாய்
கோமேவும் இந்திரன் முதலமரர் தொழஅவுணர்
கோனுயிர் குடித்தளவாய்
கோகனக வாவிபுடை சூழ்கொடு மளூர்மேவு
குமரகுரு பரமுருகனே.

வளந்தருதிருப்பரங் குன்றுதிரு வேரகம்
வயலூர் திருக்குடந்தை
மாயூர கிரிகுன்று தோறாடல் சோலைமலை
வளர் சுப்ரமணிய பேரூர்
களந்தையரு ணாசலம் விராலிமலை தோகை மலை
கதிர்காமம் வையாபுரி
கங்கைநதி பாய் பழநி செந்தூர் திருத்தணிகை
கல்லூர் விரூபாட்சிசீர்
அளந்திடுங் காவளூர் வேங்கடம் செங்குளம்
அமைந்தபே ரூராதியாம்
அற்புதத்தலமேவு நாயகா தற்சமயம்
அன்புவைத் யெனையாளுவாய்
குளந்தரு கணானுக்கு மெஞ்ஞான தேசிகா
கூவிடுங்காலாயுதா
கோகனக வாவிபுடை சூழ்கொடு மளூர்மேவு
குமரகுருபரமுருகனே,

சரவண பவா! கனக மயில்வாகனா! அசுர
சங்காரகோலாகலா!
தகரேறு காங்கயா! பரமகுருநாயகா!
சண்முகா! கார்த்திகேயா!
அரவணை முராரிமரு காகோடி சூரியப்ர
காச அருள் வாசாலகா!
யானைமுக னுக்கிளைய வேலாயுதா! தெய்வ
யானைபுணர் சுப்ரமணியா!
பிரணவச டாட்சர மகாமந்தர தந்திர
ப்ரதாபா! குறத்திகணவா!
பெண்ணரசி கன்னிதிரு சூலிநெடுநீலியுமை
பெற்றுபுத் திரவிசாகா!
குறவணையு நின்பாத சேவைதந் தென்னையாட்
கொள்ளுகதிர் காமநாதா!
கோகனக வாவிபுடை சூழ்கொடு மளூர்மேவு
குமரகுரு பரமுருகனே

சந்தன விருட்சமும் கற்பக விருட்சமும்
தங்கப்ர காசமான
சந்தான தாருவும் மந்தார மும்தெயவ
தாருவும் பாரிசாத
சுந்தர விருட்சமும் சண்பக விருட்சமும்
சோதியும் சாம்ப்ராணியும்
சூதமர மும்பலா வாழைமர முங்கனி
துலங்குவட வாலெனச்சொல்
பைந்தரு விருட்சமும் குங்கும விருட்சமும்
பார்த்திப விருட்சவகையும்
பாதிரி விருட்சமும் மொட்டுடை விருட்சமாய்
பாரிற்ப்ர சித்தியாகித்
கொந்தமர் விருட்சநிழல் வந்துவிளை யாடுனது
கோலத்தை யென்னசொல்வேன்
கோகனக வாவிபுடைசூழ்கொடு மளூர்மேவு
குமரகுரு பரமுருகனே,

நக்கனரு ளால்வந்து மனவேக ரதமேறி
நால்வாய் முகத்தாருகன்
நல்வச்ர வாகங்கி முகவனுடனேமேக
நாதனாம் பானு கோபன்
எக்கலிடு மூவாயி ரம்புதல்வர் மந்திரிகள்
ஏழா யிரத்து நால்வர்

எதிரேறு சிங்கமுகன் அதிசூரன் சுரேந்
திரன் படைக்தலைவர் முதலோர்
திக்கதல மிக்கவரு அசுரரோடு சூரரைச்
செயித்து நட மாடுமயில்மேல்
தேவர் சிறை மீட்கவே ஏறிவரு நின்மகிமை
செப்புதற் கெளி தாகுமோ
குக்குடவி நோதனே! ஆறுமுக கம்பீர
கோதண்டபாணிமருகா!
கோகனக வாவிபுடை சூழ்கொடு மளூர்மேவு
குமரகுர பரமுருகனே

ஆடாது சித்துவிளை யாடலாம் திக்கு விச
யம்செய்து வெற்றிபெறலாம்
ஆசுகவி மதுரகவி சித்ரவித் தாரகவி
யானந்த மாய்ப்பாடலாம்
ஈடாரு மில்லாத தேவரை யழைத்துடன்
இரும்பையும் பொன்னாக்கலாம்
இந்த்ரசா லத்துடன் மயேந்த்ரசா லங்கள் செய்து
எங்கும்ப்ர சித்திபெறலாம்
தாடாவு மிருகத்தின் வாய்கட்டி வேட்டையின்
தந்திரங்க ளும்புரியலாம்
தாழாத இவையெலாம் அய்யநின் னருள் பெறுந்
தன்மைக்கு நிகராகுமோ?
கோடானு கோடிமனு வந்தடி பணிந்திடுங்
கோதகல் சுயம்பிரகாசா?
கோகனக வாவிபுடை சூழ்கொடு மளூர்மேவு
குமரகுரு பரமுருகனே

சம்புவுக்கு குபதேசம் வைத்தாய் அன்றியுஞ்
சம்பந்த மூர்த்தியாகிச்
சமணர்களை வெங்கழுவி லிட்டாவா! நித்தியத்
தத்துவப்ர காசமாக
நம்பினவர் அன்புகொண்டு அவரவர் நினைத்தவரம்
நல்கியே யாதரித்தாய்
நக்கீர தேவர்சிறை மீட்டாய் சிறைக்குள்ளே
நான்முகத் தவனைவைத்தாய்
உம்பருக் கும்தயவு செய்தாய் குறத்திபால்
ஓங்குசெவ் வேங்கைமரமாய்
உற்றருளி னாய்அருண கிரிநாதர் செந்தமிழ்
உகந்தாய் உளத்திருந்து

கும்பமுனி வன்தனக் கருள் செய்தாய் நின்மகிமை
கூறுதற் கெளிதாகுமோ ?
கோகனக வாவிபுடை சூழ்கொடு மளூர்மேவு
குமரகுரு பரமுருகனே,

சித்திமதி லுன்திருப் பாதமே கெதியென்று
சித்திக்கும் அன்பருக்குச்
செல்வமுண்டாம்சகல கல்வியுண்டாம்புவன
தேசப்ர சித்தியுண்டாம்
நித்திய சரீரமுண் டாம்இலக் குமிகருணை
நிலவுங் கடாட்சமுண்டாம்
நிகரில் பலலெட்சசது ரங்கபல முண்டாம்
நெடுஞ்சமலரில் வெற்றியுண்டாம்
புத்ரசந்தானமுண்டாம்சகல பாக்கியக்
போகபோக்கியமுமுண்டாம்
புத்தியுண்டாம்நல்ல முத்தியுண்டாம்உனது
புகழினை யுரைக்கலாமோ
கொத்தடிமை குடியடிமை யாமுழுதும் என்னையாட்
கொண்ட கதிர்காமவேலா
கோகனக வாவிபுடை சூழ்கொடு மளூர்மேவு
குமரகுரு பரமுருகனே

பாரமாய் உன்பாத சேவைசெயும் அன்பரைப்
பாவந் தொடர்ந்திடாது
பஞ்சகலி நாடாது கண்ணேறுநாவேறு
பஞ்சபா வந்தொடாது
சோரசா ரக்கிரியை சாமானியப்பில்லி
துட்டமிரு கம்தொடாது
சொற்பனமு மாதாளி பண்ணாது பொறிவிடத்
தொடராது பூதம் அகலும்
கூரான வன்பிணிகள் நேராது நின்மகிமை
கூறுதற் கெளிதாகுமோ
குக்குட விநோதனாஞ் சமரமுக கெம்பீர
கோலவடி வேலாயுதா
கோரரண வீர செயதீர அடியார்க்குதவு
குலதெய்வ மெஞ்ஞானமே
கோகனக வாவிபுடை சூழ்கொடு மளூர்மேவு
குமரகுரு பரமுருகனே

கயிலாச நாதர்நித் தியகலி யாணிதம்
கருணா கடாட்சமுண்டாம்
கல்வாசனாட்டிளசை மேவுபெரு மருதூர்
கதிக்குநக ரப்ரதாபன்
செயலாளி திண்ணப்பவணிகன் அருளால் வந்து
சென்மித்த வெள்ளையப்பன்
செம்மைசேர் தருராம நாதமதி யூகிதரு
செல்வவான் பழனியப்பன்
தயைமேவு சுப்ரமணியாவென்று கூப்பிடச்
சந்தான பாக்யநல்கிச்
சத்தாங்க முங்கொடுத்து எத்தேசகாலமும்
தற்காத்த தெய்வம்நீயே
குயில்கூவு சோலைமலை செந்தூர் திருப்பரங்
குன்றிலுறை யுங்கடம்பா
கோகனக வாவிபுடை சூழ்கொடு மளூர்மேவு
குமரகுருபரமுருகனே

## வாழ்த்து

அருவாயு முருவாயு மருவுருவம் ஆகிவிளை
யாடுமா தேவர்வாழி
அலையாழி அமுதங் கடைந்தமரர் துயர்தீர்த்த
அச்சுதா னந்தன் வாழி
கருவிலுரு வாய்வகுத் தகிலாண்டகோடியுங்
கற்பித்த வேதன் வாழி
கண்ணாயிரங்கொண்டு விண்ணோரை ரட்சித்த
கார்மேக வூர்திவாழி
மருவுமறை யவர்களொடு முப்பத்து முக்கோடி
வானவர்கள் முனிகள்வாழி
மன்னரொடு வணிசேகர் காராளர் முதலாக
வளர்சீவ செந்துவாழி
தருவனைய திண்ணப்ப வணிகனருள் ராமநா
தன்கிளை தழைத்து வாழி
தயவுபுரி கொடுமளூர்க் குமரகுரு பரமுருகர்
சன்னிதியும் வாழிதானே.

## வந்தான் கருப்பன் விளையாட

வந்தான் கருப்பன் விளையாட
வாளில் ஏறி நின்றாட
வந்தான் கருப்பன் விளையாட
வாளில் ஏறி நின்றாட

வாளும் வேலும் விளையாட
வாளில் ஏறி நின்றாட
சுக்கு மாந்தடி சுழன்றாட
வந்தான் கருப்பன் விளையாட

காலில் சலங்கை கலகலக்க
கையில் வாளும் பளபளக்க
முறுக்கு மீசை துடி துடிக்க
வந்தான் கருப்பன் விளையாட

பாலும் சோறும் கமகமக்க
பள்ளையம் இங்கே ஜொலி ஜொலிக்க
பிள்ளைகள் நாங்கள் கொண்டாட
வந்தான் கருப்பன் விளையாட

சந்தனக் கருப்பன் தானாட
சங்கிலிக் கருப்பன் உடனாட
பதினெட்டாம் படி கருப்பனுமே
வந்தான் இங்கே விளையாட

முன்னோடியுமே ஓடிவர
நொண்டியும் இங்கே ஆடிவர
பதினெட்டாம் படி கருப்பனுமே
வந்தான் இங்கே விளையாட

கொரட்டி எனும் ஓர் ஆலயமாம்
கூடி இருப்பவன் சாஸ்தாவாம்
தங்கையும் அங்கே அருகிருக்க
தரணியை காக்க வந்தவனாம்

*கவிஞர் அருண் வீரப்பா, மதுரை.*

## "மலையாளக் கருப்பையா"

மலையாளக் கருப்பையா – சாமியே
மங்களங்கள் தரவேணும் – எங்கள்
குளத்தூர் கருப்பையா – சாமியே
குல நலம் காக்கவேணும் (தொட்டியத்து)

தொட்டியத்துக் கருப்பையா – சாமியே
துணைவந்து காக்க வேணும் – எங்கள்
முன்னோடிக் கருப்பையா – சாமியே
முன்னே வந்து காக்கவேணும் (தொட்டியத்து)

கொரட்டி வாழ் கருப்பையா – சாமியே
கூட வந்து காக்க வேணும் – எங்கள்
திட்டாணிக் கருப்பையா – சாமியே
திடம், தந்து காக்கவேணும் (தொட்டியத்து)

கட்டுச்சோத்துக் கருப்பையா – சாமியே
கருணையுடன் காக்கவேணும் – எங்கள்
உறங்காப்புளிக் கருப்பையா – சாமியே
உடன் வந்து காக்க வேணும் (தொட்டியத்து)

வல்லயம்பதிக் கருப்பையா – சாமியே
வாழவழி காட்டவேணும் – எங்கள்
சந்தனத்துக் கருப்பையா – சாமியே
சந்ததிகள் காக்கவேணும் (தொட்டியத்து)

பதினென்படிக் கருப்பையா – சாமியே
பலம் தந்து காக்கவேணும் – எங்கள்
தேரடிக் கருப்பையா – சாமியே
திவ்யமுடன் காக்க வேணும் (தொட்டியத்து)

ராங்கியத்துக் கருப்பையா – சாமியே
பாங்குடனே துணைவரணும் – எங்கள்
செங்கடாக் கருப்பையா – சாமியே
சங்கடங்கள் தீர்க்கவேணும் (தொட்டியத்து)

சின்ன கருப்பையா – சாமியே
செல்வ வளம் தரவேணும் – எங்கள்
பெரிய கருப்பையா – சாமியே
பெருவாழ்வு தரவேணும் (தொட்டியத்து)

பதினெட்டு படியாளும் – எங்கள்
பந்தளத்துக் கருப்பையா – இந்தப்
பக்தர் நலம் காத்திடவே – என்றும்
பக்கத் துணை வரவேணும் (தொட்டியத்து)

*அருளிசைமணி அரு.சுப்பிரமணியன், நேமத்தான்பட்டி.*

## அய்யன் வாரார், கருப்பர் வாரார்

அய்யன் வாரார்
மெய்யன் வாரார் – அழகர்
கோயில் மலை இறங்கிக்
கருப்பர் வாரார்

வல்லவேட்டிப் பட்டுடுத்தி
வரிசைமணி நூலணிந்து
அய்யன் வாரார்–ஆகாயக்
கருப்பர் வாரார் (அய்யன்)

வீச்சரிவாள் கையிலேந்தி
வேகமான குதிரைஏறி
வள்ளல் வாரார் – ஆலடிக்
கருப்பர் வாரார் (அய்யன்)

பூச்சொரியும் பார்வையுடன்
புகழ்விரிக்கும் சேவையுடன்
மன்னன் வாரார் – தொட்டியக்
கருப்பர் வாரார் (அய்யன்)

முறுக்குமீசை துடித்திருக்க
முந்திவரும் அடியெடுத்து
அய்யன் வாரார் – வையக்
கருப்பர் வாரார் (அய்யன்)

சாம்பிராணி வாசத்திலே
ஜவ்வாதும் பொட்டிட்டு
செல்வர் வாரார் – சோணைக்
கருப்பர் வாரார் (அய்யன்)

செங்கரையில் மேலேநின்று
செல்வமெலாம் தந்துநின்று
முன்னே வாரார் – முன்னோடிக்
கருப்பர் வாரார் (அய்யன்)

*-அருளிசை மணி ப.ஓ.ரெங்கநாதன்*

## கருப்பர் வாரார்

வாராரய்யா வாராரு
கருப்பரிங்கே வாராரு
வாராரய்யா வாராரு
கருப்பரிங்கே வாராரு...

அள்ளி – முடிச்ச கொண்டையப்பா
அழகுமீசை துள்ளுதப்பா
வல்ல வேட்டிப் பட்டுடனே
வாராரய்யா – ராசாப்போலே (வாராரய்யா)

ஆளுயரம் அரிவாளாம்
அதுக் கேத்த கம்பீரமாம்
காலிலே – முள்ளுச் செருப்பாம்
கருப்பனுக்கே தனிச் சிறப்பாம் (வாராரய்யா)

வீச்சரிவாள் கையிலுண்டு
வேகமான குதிரையுண்டு
சுற்றிவரும் பகையழிக்கச்
சுக்குமாந் தடியமுண்டு (வாராரய்யா)

இடுப்பிலே சலங்கையுண்டு
இடிமுழக்கச் சிரிப்புமுண்டு
வாக்கிலே வலிமையுண்டு
வற்றாத கருணையுண்டு (வாராரய்யா)

கையிலே சவுக்குமுண்டு
கனகமணிச் சலங்கையுண்டு
பாற்கடலில் பள்ளிகொண்ட
பரந்தாமன் நாமமுண்டு (வாராரய்யா)

சந்தனமுண்டு ஜவ்வாதுண்டு
சாம்பிராணி வாசமுண்டு
சம்பங்கி ரோஜாமுல்லை
மணக்குதப்பா இங்கே இப்போ... (வாராரய்யா)

*அருளிசை மணி நேமத்தான்பட்டி. சுப்பையா*

வண்ண மயில் மீதமர்ந்த குமரா உனை
எண்த்தால் துதிப்போர்க்கு ஏற்றம் பல தந்திடுக



### தீப மங்கள ஜோதி நமோ நம

நாத விந்துக லாதீ நமோ நம
வேத மந்த்ரசொ ரூபா நமோ நம
ஞான பண்டித ஸாமீ நமோ நம வெகுகோடி
நாம சம்புகு மாரா நமோ நம
போக அந்தரி பாலா நமோ நம
நாக பந்தம யூரா நமோ நம பரசூரர்
சேத தண்டவி நோதா நமோ நம
கீத கிண்கிணி பாதா நமோ நம
தீர சம்ப்ரம வீரா நமோ நம கிரிராஜ
தீப மங்கள ஜோதீ நமோ நம
தூய அம்பல லீலா நமோ நம
தேவ குஞ்சரி பாகா நமோ நம அருள்தாராய்
ஈத லும்பல கோலால பூஜையும்
ஓத லுங்குண ஆசார நீதியும்
ஈர முங்குரு சீர்பாத சேவையும் மறவாத
எழ்த லம்புகழ் காவேரி யால்விளை
சோழ மண்டல மீதே மனோகர
ராஜ கெம்பிர நாடாளு நாயக வயலூரா
ஆத ரம்பயி லூரூரர் தோழமை
சேர்தல் கொண்டவ ரோடே முனாளினில்
ஆடல் வெம்பரி மீதேறி மாகயி
ஆதி யந்தவு லாவாசு பாடிய
சேரர் கொங்குவை காவூர் நனாடதில்
ஆவி னன்குடி வாழ்வான தேவர்கள் பெருமாளே

### வாழ்த்து

ஆறிரு தடந்தோள் வாழ்க ஆறுமுகம் வாழ்க வெற்பைக்
கூறுசெய் தணிவேல் வாழ்க குக்குடம் வாழ்க செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க யானைதன் அணங்கு வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க வாழ்க சீர் அடியார் எல்லாம்

## நந்தீஸ்வரர் பெருமை

"நந்திஎம் பெருமான் தன்னை
நாடொறும் வணங்கு வோர்க்குப்
புந்தியில் ஞானம் சேரும்
பொலிவுறு செல்வம் கூடும்
சிந்தையில் அதிதி தோன்றும்!
சிறப்பு மக்கள் சேர்வர்
இந்திர போகம் கிட்டும்
இணையிலா வாழ்வு தானே!

## நலம் தரும் நந்தி

கந்தனின் தந்தை தன்னைக்
கவினுறச் சுமந்து செல்வாய்
நந்தனார் வணங்குதற்கு
நடையினில் விலகிநின்றாய்
அந்தமாய் ஆதியாகி
அகிலத்தைக் காக்க வந்தாய்
நந்தியே உனைத்துதித்தேன்
நாடி வந்தெம்மைக் காப்பாய்
ஒன்பது கோள்களுக்கும்
உயரிய பலன் கொடுப்பாய்
பொன் பொருள் குவிய வைப்பாய்
புகழையும் வளர்த்து வைப்பாய்
சிந்தனை வளம்கொடுப்பாய்
சிகரத்தில் தூக்கி வைப்பாய்
நந்தியே உனைத்துதித்தேன்
நாடி வந்தெம்மைக் காப்பாய்
மாலைகள் ஏற்க வைப்பாய்
மழலைகள் பிறக்க வைப்பாய்
வேலைகள் கிடைக்க வைப்பாய்
விதியையும் மாற்றி வைப்பாய்
சோலையின் வண்ணப் பூவைப்
சூடிடும் நந்தி தேவா
நாளும் நான் உனைத்துதித்தேன்
நாடி வந்தெம்மைக் காப்பாய்
தஞ்சையில் பெரிய நந்தி
தளிருடல் வெண்ணை சாத்தி
அஞ்சாத வேந்தன் நந்தி
அழகிய நெகமம் நந்தி

குஞ்சர முகத்தான் தந்தை
குந்திடும் ரிஷப நந்தி
தஞ்சமாய் உனையடைந்தேன்
தயங்காது எம்மைக் காப்பாய்

## நலம் சேர்க்கும் நந்தீஸ்வரர்

சிவனாரை என்றைக்கும் சுமக்கும் நந்தி
சேவித்த பக்தர்களைக் காக்கும் நந்தி
கவலைகள் எந்நாளும் போக்கும் நந்தி
கயிலையிலே நடம்புரியும் கனிந்த நந்தி
பள்ளியறைப் பகக்த்தில் இருக்கும் நந்தி
பார்வதியின் சொற்கேட்டுச் சிரிக்கும் நந்தி
நல்லதொரு ரகசியத்தைக் காக்கும் நந்தி
நாள்தோறும் தண்ணீரில் குளிக்கும் நந்தி
செங்கரும்பு உணவுமாலை அணியும் நந்தி
சிவனுக்கே உறுதுணையாய் விளங்கும் நந்தி
மங்களங்கள் அனைத்தையுமே கொடுக்கும் நந்தி
மனிதர்களின் துயர்போக்க வந்த நந்தி
அறுகம்புல் மாலையையும் அணியும் நந்தி
அரியதொரு வில்வமே ஏற்ற நந்தி
வருங்காலம் நலமாக வைக்கும் நந்தி
வணங்குகிறோம் எமைக்காக்க வருக நந்தி
பிரதோச காலத்தில் பேசும் நந்தி
பேருளை மாந்தருக்கும் வழங்கும் நந்தி
வரலாறு படைத்துவரும் நல்ல நந்தி
வறுமையினை எந்நாளும் அகற்றும் நந்தி
கெட்டகனா அத்தனையும் மாற்றும் நந்தி
கீர்த்தியுடன் குலம்காக்கும் இனிய நந்தி
வெற்றிவரும் வாய்ப்பளிக்க உதவும் நந்தி
விதியினைத்தான் மாற்றிவிட விழையும் நந்தி
வேந்தன்நகர் நெய்யினிலே குளிக்கும் நந்தி
வியக்கவைக்கும் தஞ்சாவூர் பெரிய நந்தி
சேர்ந்த திருப்புண்கூரில் சாய்ந்த நந்தி
செவிசாய்த்து அருள் கொடுக்கும் செல்வ நந்தி
கும்பிட்ட பக்தர் துயர் நீக்கும் நந்தி
குடம்குடமாய் அபிஷேகம் பார்த்த நந்தி
பொன் பொருளை வழங்கிடவே வந்த நந்தி
புகழ் குவிக்க எம் இல்லம் வருக நந்தி